தியாகச் செம்மல்

# ஜீவா

ஜீவா பற்றிய
கருத்துரைகளும்
தியாக வரலாறும்
நிரம்பிய, அரிய
தொகுப்பு நூல்

ஏ. பி. நாகராஜன்.

— : வெளியீடு : —
அரிமழம பதிப்பகம்
63. உஸ்மான் ரோடு, தியாகராயநகர், சென்னை-17.

# பதிப்புரை

தேச சுதந்திரத்திற்காகவும், பாட்டாளி வர்க்கத்தின் ்ண்புடைய வாழ்க்கைக்காகவும் தம்மையும் தமது வாழ்க்கையையும் தியாகம் செய்துகொண்ட ஓரிரு தலைவர்களில் தோழர் ஜீவா தலையாயவர். பிறந்தது முதல் பிரியும் வரை தியாகச் செம்மலாகவே வாழ்ந்து காட்டினார். மார்க்ஸிய தத்துவத்துடனும்-காந்திய லட்சியத்துடனும் எளியவர்களுக்காக, எளிய வாழ்க்கை வாழ்ந்து காட்டிய எளியவர் ஜீவா !

அன்னவரது திடீர் மறைவு தமிழகத்தில் கண்ணீர்க் காவிரியைத் திறந்துவிட்டது. இதயம் திறந்து தலைவர்கள் கதறினர். எண்ணற்ற ஏடுகள் இரங்கலுரை வரைந்தன. மனிதன் எப்படி வாழ்க்கை நடத்தவேண்டும்; எவ்வகையில் பணியாற்ற வேண்டும் என்பதற்கு இலக்கணமாக இருக்கும் தகுதி படைத்தவர் ஜீவாதான் என்பதை இத்தொகுப்பு தெளியக் காட்டும்.

தியாகச் செம்மல் ஜீவா வாழ்க!

அவர் தம் திருப்பணிகள் என்றும் வளர்க!

என்ற வாழ்த்துரையுடன் இத்தொகுப்பை மக்களிடம் சமர்ப்பிக்கிறோம். இந்நூலின் நிறைவு ஜீவாவின் சிறப்பாகும். குறைவு எங்கள் திறமையின் குறிப்பாகும்,

வணக்கம்

அரிமழம் பதிப்பகத்தார்

# என் கடமை

தூர தூரத்தே ஒரு கம்பீரமான குரல் ஒலிக்கிறது — 'புரட்சி ஓங்குக' என்ற அந்தத் தொனி இந்த பூமியில் பல புரட்சிகளை செயல்படுத்தி வந்தது—வீதிகளிலும், விந்தை மனிதர்களின் சிந்தைகளிலும் 'புரட்சி' என்ற ஒலியை பலமாக எதிரொலிக்கச் செய்தது.

எதற்கும் மருட்சி அடையாத அந்தப் புரட்சி எங்கிருந்து புறப்பட்டது? ஆம்... அதோ! வீதியின் நடை பாதை ஓரம், கையில் சிறு பையுடன் சாய்ந்து சாய்ந்து நடந்து செல்லும் அந்த சாதாரண ஜீவாத்மா எழுப்பிய குரல்தான் அது!

எளியவர்கள் இருவர் பேச்சுத் துணையாக உடன்வர, மாபெரும் ராஜிய பிரச்னையையும் மிக எளிதாக்கி சொல்லிக் கொண்டே நடக்கும் ஜீவானந்தம் அல்லவா அவர்! ஆம். அவர் சொல்லிவந்த நாட்களில் நம்மில் பலர் கேட்க மறுத்தோம். அவர் சொல்வதை நிறுத்திய காலத்தில் நாம் கேட்கத் துடிக்கிறோம்.

அமரர் ஜீவாவைப்பற்றி அறிஞர்களும், கலைஞர்களும், ஏனைய தலைவர்களும் பத்திரிகைகளும் - பல்வேறு சந்தர்ப்பங்களிலும் அளித்த கருத்துரைகளை சுவையுறத் தொகுத்திருக்கிறேன். ஆம். அதற்குக் காரணம் உண்டு.

ஜீவா அவர்களோடு, அரசியல் இலட்சியத்தால் ஒன்றிணைந்தேன். அவரது அன்பால் கட்டுண்டேன். அறிவுரையால் ஆசானாக மதித்தேன். உரிமை பாராட்டி, கண்டிக்கும் போது உற்றவராக ஏற்றுக் கொண்டேன்.

மறைந்த அந்த மக்கள் தலைவரைப் பற்றிய இந்த "மணிவாசகங்களை" தொகுத்தளிப்பது, எனது கடமையாகவும், அவர் கொண்டிருந்த இலட்சியத்திற்கு செய்யும் சிறு தொண்டாகவும் கருதி, செய்த முயற்சிதான் — இந்த **"தியாகச் செம்மல் ஜீவா."**

தொகுப்பாசிரியர்,
**அரிமழம் முத்துமோகன்**

# நான் ஒரு நாஸ்திகன் ?

நான் ஒரு நாஸ்திகன் ! ஏனெனில் நான் மனிதர்களை நேசிக்கிறேன். விண்ணுலக சுவர்க்கத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. மனித சக்தியால் நாம் பிறந்த இந்த மண்ணையே சுவர்க்கமாக்க முடியும் என்று திடமாக நம்புகிறேன். அதில் பூர்ண நம்பிக்கை கொண்டு உழைப்பவன் நான்.

அன்பும் அரசியலும் வெவ்வேறல்ல உலகம் முழுமைக்கும் அன்பும், சகோதரத்வமும், நிலவவேண்டுமென்பதே உண்மையான அரசியல் தத்துவமாகும், ஆகவே அன்பினை அழிக்கக்கூடிய எது ஒன்றும் அரசியலாக இருக்க முடியாது — கூடாது.

மேலான மாறுபாடுகள் அரசியலில் இயல்பு; காலத்தால் மாறக் கூடியதும் கூட. அதற்காக மனக்குரோதத்தையும் மனித விரோதங்களையும் வளர்ப்பது அரசியல் நெறியாகாது.

எது ஒன்றையும் மனித குல மேம்பாட்டிற்கான மனம் கொண்டே நோக்கவேண்டுமென்பதே எனது வேண்டுகோள்.

அமரர் ஜீவானந்தர்.



திருமதி பத்மாவதி ஜீவானந்தம்-தியாகச் செம்மல் ஜீவா
ஜீவாவின் இலட்சிய வாரிசு ஸ்டாலின் மணிக்குமார்

# தியாகச் செம்மல் ஜீவா !

## பிறந்தது முதல் ... ... ...

**பா**ரத மணித் திருநாடு. செந்தமிழ் நிலம். நாஞ்சில் பகுதி; பூதப்பாண்டி எனும் சிற்றூர். 1906-ம் ஆண்டில் ஒரு நாள். விவசாய குடும்பத்தில் ஒரு புத்தம் புதிய குரல்—புரட்சிகரமான குரல் 'குவா குவா' எனக் கூவிற்று. கூடியிருந்தவர் களித்தனர். ஏன் தமிழகமே, அந்தக் கண நேரத்தில் மகிழ்ச்சிக் கடலில் இலயித்துத்தானிருக்க வேண்டும்.

தமிழ்த்தாய் ஆசி கூறினாள். வள்ளுவன் வாழ்த்திக் கொண்டிருந்தான். கம்பன் களிப்பினில் திளைத்துக்கொண்டிருந்தான். திருமூலர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் இளங்கோவடிகள் இன்னோரன்ன தமிழ்ப்பெருங் கவிகள் 'வாழ்க வாழ்க' என்றெழுப்பிய வாழ்த்தொலி விண்ணகத்தினின்று விரைந்து வந்து மண்ணில் எதிரொலித்தது. உழைப்பின் சக்தி அந்தக் குரலோடு இழைந்து இணைந்தது. பொது நலம் தனக்கென ஒரு புகலிடம் தேடிக்கொண்டு விட்டது, அந்தக் குரலோசையைக் கேட்டவுடன்!

**என்ன?** ஒரு சிறு ஜீவனுக்காகவா இவ்வளவும் என பலர் மயங்கலாம். ஆம்! அந்த ஜீவன் சாதாரண ஜீவன் அல்ல! தமிழின் ஜீவசக்தியை ரத்த ஓட்டமாக—உழைப்பின் ஜீவசக்தியை உயிர் நாடியாக — சேவையின் ஜீவ சாரத்தை சுவாச மூச்சாகப் பெற்று பிறந்த ஒப்பற்ற ஜீவானந்த செல்வந்தான் அது. இன்று தாயகத்து மக்கள் தனிப் பெருமையுடனும் உரிமையுடனும் ஜீவா எனக் கூறி பெருமிதம்கொள்ளும் மக்கள் தலைவர் ஜீவானந்தம், தான் நமது **தியாகச் செம்மல் ஜீவா!**

தாய் உமையம்மையும், தந்தை பட்டன் பிள்ளையும் தாங்கள் பெற்றெடுத்த குழந்தைக்கு ஜீவானந்தம் எனப் பெயர் சூட்டினர். சூட்டிய பெயருக்கேற்ப ஜீவானந்தம் இப் பரந்த பாரத நாட்டின் கோடானுகோடி ஜீவன்களுக்கு ஆனந்தத்தைத் தருவதற்காகவே வாழ்ந்தார்.

ஜீவா சின்ன வயதில் துடிப்பு நிறைந்த பிள்ளையாகத் திகழ்ந்தார். சுறுசுறுப்பு அவரது உடன் பிறப்பு. ஆய்ந்து முடிவெடுக்கும் அறிவுத் திறன் ஐந்திலே அவரிடம் முளை விட்டதாகும். மக்கள் சேவை அவரது இலட்சியமாக தலை தூக்கியது. பொது நலம் அவரை தத்து எடுத்துக் கொண்டது.

சின்ன வயதில் சொந்த ஊரிலே திருப்பணிச் சங்கத்தின் உறுப்பாகி, ஊர் திருத்தமும், சீர்திருத்தமும் செய்து அரும்பணி யாற்றினர்.

12 வயதிலே ஈன்ற தாயை இழந்து தவித்த நேரத் திலும், தாய் நாட்டின் தேசிய சின்னமான கதராடை அணிந்தே ஈமக்கடன் செய்வேன்என்று பிடிவாதம் செய்து, அப்படியே இறுதிக் கடனைச் செய்தார். இத்தகைய இலட்சிய வெறிகொண்ட ஒரு வீர இளைஞன் தேசியப் போராட்டத்தில் தீரமிகு பங்குகொண்டதில் ஆச்சரியமே இல்லை.

நாட்டின் விடுதலைபோராட்டமாகஜாலியன்வாலாபாக், பஞ்சாப் படுகொலையால் மக்கள் எரிமலையென கொதித் தெழுந்தனர். இதை ஒன்று திரட்டி அண்ணல் காந்திஜீ துவக்கிய ஒத்துழையாமை இயக்கம் காட்டுத் தீயென இமயம் முதல் குமரி வரை பரவி எக்களித்தது. இளைஞன் ஜீவாவின் உள்ளத்தை ஈர்த்தது. பள்ளிப் படிப்பிலிருந்து துள்ளி எழுந்து பாரத நாட்டின் விடுதலை இயக்கத்திற் காகவே தனது பேச்சையும், மூச்சையும் பணித்துக்கொண் டார். உற்றார் உறுமல், ஊரார் ஏசல், கண்டவர்களின் கண்டனக் கணைகள், சனாதனிகளின் சாபம்! இவ்வளவை யும் கண்டு கலங்காது தீண்டாதாரை கைகோர்த்து ரத வீதி யிலே அழைத்துச் சென்று, ஆண்டாண்டு கால சம்பிரதா யத்தை அரை நொடியில் தகர்த்து அண்ணல் காந்திஜியின் அடிச்சுவட்டில் தீண்டாமை ஒழிப்பு தத்துவத்தைத் தெரு வெல்லாம் முழக்கம் செய்தார்.

தமிழன்னையின் ஆசிபெற்ற ஜீவா, தாய்நாட்டின் விடுதலைக்கான அன்னிய ஆட்சியை ஒழித்துக்கட்ட ஆவேச மாகப் பேசினர். ஆக்ரோஷமான விடுதலை எழுச்சி கீதங்

களையும் இயற்றினர். எங்கும் முழக்கினர். அதுகண்டு எல்லோரும் வியந்தனர்!

வட திருவிதாங்கூரில் வெள்ளப்பெருக்கால் சேதமுற்ற போது நாடு முழுமையும் சுற்றி கண்ணீர் கசிந்துருக சொல் மாறி பொழிந்து நிதியும், துணியும்—நெல்மணியும் திரட்டி வேதனையால் துடித்த உள்ளங்களை சமனப்படுத்திய சாதனை பிரமிப்பூட்ட வல்லது! இந்தனை இடைவிடா பணிகளுக்குமிடையேயும் காந்தி வாசகசாலை ஒன்றினை துவக்கி அஞ்ஞான இருளினைப் போக்கவும், அருள் ஒளி வீசவும் அயராப்பணி செய்தார். தேசிய இயக்கம் ஜீவாவை ஒரு அங்கமாக்கிக் கொண்டது. தமிழ்க் கவிதை அவர் உள்ளத்திலிருந்து ததும்பி வெள்ளமென பெருக்கெடுத்து ஓடியது.

வைக்கம் — சுசீந்திரம், தீண்டாமை ஒழிப்பு அறப் போரில் தொண்டர்படைத் தளபதியாகப் பொறுப்பேற்று காந்திஜியின் கடமை வாரிசாகப் பணியாற்றினர். இந்தப் போராட்டத்தில் 'வழிவிடுவீர் வழிவிடுவீர்' என்ற அவரது புரட்சிப் பாடல் தமிழக முழுமைக்கும் பரவியது; புகழ் பெற்றது.

1927-ல் சென்னையில் டாக்டர் அன்சாரி தலைமையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரசுக்குப் பிரதிநிதியாக கலந்து கொண்டார்.

ஏற்றத் தாழ்வு — சாதி வித்தியாசம் பார்த்தோ — கேட்டோ—சகித்தறியாத ஜீவாவின் உள்ளத்தை, ரஷ்யா சென்று திரும்பிய ஈ. வே. ரா.வின் சுயமரியாதை சமதர்ம பிரசாரம் ஈர்த்தது.

அதன் விளைவாக சுயமரியாதை வீரர் பட்டியலில் முதல் பிரதிநிதியாக விளங்கி, சமுதாய சீர்திருத்த இயக்கத்திற்கு வேர் ஊட்டம் கொடுக்கத் தலைப்பட்டார்.

சமதர்மப் பிரசாரம் செய்த ஈ. வெ. ரா.வின் மாவட்ட சுயமரியாதை . சமதர்ம மாநாட்டில் ஜீவாவின் புரட்சிப் பிரசங்கம் புதிய கண்ணோட்டமிக்கதாயும், பூரிப்பு தருவதாகவுமிருந்தது.

ஜீவா சின்ன வயதில் துடிப்பு நிறைந்த பிள்ளையாகத் திகழ்ந்தார். சுறுசுறுப்பு அவரது உடன் பிறப்பு. ஆய்ந்து முடிவெடுக்கும் அறிவுத் திறன் ஐந்திலே அவரிடம் முளை விட்டதாகும். மக்கள் சேவை அவரது இலட்சியமாக தலை தூக்கியது. பொது நலம் அவரை தத்து எடுத்துக் கொண்டது.

சின்ன வயதில் சொந்த ஊரிலே திருப்பணிச் சங்கத்தின் உறுப்பாகி, ஊர் திருத்தமும், சீர்திருத்தமும் செய்து அரும்பணி யாற்றினார்.

12 வயதிலே ஈன்ற தாயை இழந்து தவித்த நேரத் திலும், தாய் நாட்டின் தேசிய சின்னமான கதராடை அணிந்தே ஈமக்கடன் செய்வேன்என்று பிடிவாதம் செய்து, அப்படியே இறுதிக் கடனைச் செய்தார். இத்தகைய இலட்சிய வெறிகொண்ட ஒரு வீர இளைஞன் தேசியப் போராட்டத்தில் தீரமிகு பங்குகொண்டதில் ஆச்சரியமே இல்லை.

நாட்டின் விடுதலைபோராட்டமாகஜாலியன்வாலாபாக், பஞ்சாப் படுகொலையால் மக்கள் எரிமலையென கொதித் தெழுந்தனர். இதை ஒன்று திரட்டி அண்ணல் காந்திஜி துவக்கிய ஒத்துழையாமை இயக்கம் காட்டுத் தீயென இமயம் முதல் குமரி வரை பரவி எக்களித்தது. இளைஞன் ஜீவாவின் உள்ளத்தை ஈர்த்தது. பள்ளிப் படிப்பிலிருந்து துள்ளி எழுந்து பாரத நாட்டின் விடுதலை இயக்கத்திற் காகவே தனது பேச்சையும், மூச்சையும் பணித்துக்கொண் டார். உற்றார் உறுமல், ஊரார் ஏசல், கண்டவர்களின் கண்டனக் கணைகள், சனாதனிகளின் சாபம்! இவ்வளவை யும் கண்டு கலங்காது தீண்டாதாளை கைகோர்த்து ரத வீதி யிலே அழைத்துச் சென்று, ஆண்டாண்டு கால சம்பிரதா யத்தை அரை நொடியில் தகர்த்து அண்ணல் காந்திஜியின் அடிச்சுவட்டில் தீண்டாமை ஒழிப்பு தத்துவத்தைத் தெரு வெல்லாம் முழக்கம் செய்தார்.

தமிழன்னையின் ஆசிபெற்ற ஜீவா, தாய்நாட்டின் விடுதலைக்கான அன்னிய ஆட்சியை ஒழித்துக்கட்ட ஆவேச மாகப் பேசினார். ஆக்ரோஷமான விடுதலை எழுச்சி கீதங்

களையும் இயற்றினார். எங்கும் முழக்கினார். அதுகண்டு எல்லோரும் வியந்தனர்!

வட திருவிதாங்கூரில் வெள்ளப்பெருக்கால் சேதமுற்ற போது நாடு முழுமையும் சுற்றி கண்ணீர் கசிந்துருக சொல் மாறி பொழிந்து நிதியும், துணியும்—நெல்மணியும் திரட்டி வேதனையால் துடித்த உள்ளங்களை சமனப்படுத்திய சாதனை பிரமிப்பூட்ட வல்லது! இத்தனை இடைவிடா பணிகளுக்குமிடையேயும் காந்தி வாசகசாலை ஒன்றினை துவக்கி அஞ்ஞான இருளினைப் போக்கவும், அருள் ஒளி வீசவும் அயராப்பணி செய்தார். தேசிய இயக்கம் ஜீவாவை ஒரு அங்கமாக்கிக் கொண்டது. தமிழ்க் கவிதை அவர் உள்ளத்திலிருந்து ததும்பி வெள்ளமென பெருக்கெடுத்து ஓடியது.

வைக்கம் — சுசீந்திரம், தீண்டாமை ஒழிப்பு அறப் போரில் தொண்டர்படைத் தளபதியாகப் பொறுப்பேற்று காந்திஜியின் கடமை வாரிசாகப் பணியாற்றினார். இந்தப் போராட்டத்தில் 'வழிவிடுவீர் வழிவிடுவீர்' என்ற அவரது புரட்சிப் பாடல் தமிழக முழுமைக்கும் பரவியது; புகழ் பெற்றது.

1927-ல் சென்னையில் டாக்டர் அன்சாரி தலைமையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரசுக்குப் பிரதிநிதியாக கலந்து கொண்டார்.

ஏற்றத் தாழ்வு — சாதி வித்தியாசம் பார்த்தோ — கேட்டோ—சகித்தறியாத ஜீவாவின் உள்ளத்தை, ரஷ்யா சென்று திரும்பிய ஈ. வே. ரா.வின் சுயமரியாதை சமதர்ம பிரசாரம் ஈர்த்தது.

அதன் விளைவாக சுயமரியாதை வீரர் பட்டியலில் முதல் பிரதிநிதியாக விளங்கி, சமுதாய சீர்திருத்த இயக்கத்திற்கு வேர் ஊட்டம் கொடுக்கத் தலைப்பட்டார்.

சமதர்மப் பிரசாரம் செய்த ஈ. வெ. ரா.வின் மாவட்ட சுயமரியாதை - சமதர்ம மாநாட்டில் ஜீவாவின் புரட்சிப் பிரசங்கம் புதிய கண்ணோட்டமிக்கதாயும், பூரிப்பு தருவதாகவும் இருந்தது.

பொருளாதாரம், முன்னேற்றம், சமுதாய சீர்திருத்தம் ஆகிய இரண்டும் ஜீவாவின் இரண்டு கண்களாயின. அதை உயிரும் உடலுமாகக் கொண்டு பாட்டாளி வர்க்கத்தின் கூட்டாளியானார்.

அரசியல்—சமுதாயம் இவைகளில் ஈடுபட்டோருக்கும் அந்நாளில் சிறைவாசந்தான் பரிசு.

புரட்சி வீரரான ஜீவாவுக்கும் அந்த "பரிசு" கிடைக்கத் தான் செய்தது.

1930 சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டு சிறைக் கொடுமைக்கு ஆளானார்.

சிறையிலே தூக்குமேடையை முத்தமிட்ட தியாகச் செம்மல் பகவத் சிங்கம் தோழர்களுடைய பழக்கமும் பிணைப்பும் ஜீவாவுக்கு ஏற்பட்டது.

புரட்சிகரமான தத்துவமொழியாக வெளிவந்த ஜீவா **'நான் நாஸ்திகன் ஏன்?'** என்ற பகவத்சிங் நூலை தமிழாக்கம் செய்ததற்காக, மீண்டும் சிறைப்படுத்தப் பட்டார். புத்தகத்திற்காக முதலில் தமிழகத்தில் சிறை சென்றவர் ஜீவாதான்.

காரைக்குடி சென்று, தேசிய இளைஞர்களைத் திரட்டி அவர்களது ஆதரவில் காந்திஜி ஆசிரமத்தை நிறுவி அரிஜனத் தொண்டு, அரசியல் தொண்டு, கதர்த் தொண்டு ஆகிய தேசிய தீவிரப் பணியில் திடமாகப் பாடுபட்டதோடு சட்ட மறுப்புக் குழுவின் தலைவராகப் பொறுப்பேற்று போராட்டம் செய்ததற்காக, வெள்ளை ஆட்சியினரால் கைது செய்யப்பட்டு, ஓராண்டு சி. வகுப்பு கைதியாகச் சிறைவாசமும் சித்ரவதையும் பட்டார்.

"குடியரசு, பகுத்தறிவு"களில் ஜீவாவின் சமதர்மக் கட்டுரைகள் தனித்தன்மையாக ஒளி வீசியது.

"**சமதர்மம்**" பத்திரிகைத் துவக்கம். சட்டம் பாய்ந்தது. சமதர்மம் "**புரட்சியாக**" புது உருவெடுத்தது.

**1934.** சரித்திரத்தின் ஓர் திருப்பம். 1934-ம் ஆண்டு ஜீவாவைத் தோழர் ஜீவாவாக்கியது. சுயமரியாதை இயக்கம் தேச விரோத சக்திகளுக்கு ஆதரவாகி நின்றதால், பொது வுடமைத் தத்துவங்களில் லயித்தார். அதன் அடிப்படையில்

தொழிலாளர் பாதுகாப்புச் சங்கத்தை கட்டி வளர்த்தார். 1934-ல் நீதி கட்சியை முறியடிக்க நிமிர்ந்து நின்று தீவிர சூறாவளிப் பிரசாரம் செய்து தேசிய சக்திகளின் வெற்றிக்குப் பாடுபட்டார்.

**1934—35** சென்னை மாகாணத் தொழிற்சங்கத் தலைவராக இருந்து பெரும்பணி செய்தார்.

*1936ல்* தோழர்கள் டாங்கே, எஸ்விகாட்டே ஆகியோருடன் தமிழகத்தில் கம்யூனிஸ்ட் கட்சியை கூட்டிய மூலத் தலைவர்களில் பிரதானமிக்கவர் ஜீவா. அவரது அரும்முயற்சியால் நிதிதிரட்டி, அதன் ஆசிரியராகவும் இருந்து துவக்கி வளர்க்கப்பட்ட பொதுஉடமை இயக்க வார ஏடுதான், இன்று வெற்றி நடைபோடும் நாளிதழான "ஜனசக்தி."

*1937, 38, 39.* இந்திய தேசிய காங்கிரஸிலும், காரியக் கமிட்டியிலும் உறுப்பினராக இருந்து சூறாவளி சுற்றுப் பயணம் செய்து, அதே ஆண்டு நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் வெற்றி வாகை சூடி மந்திரிசபை அமைப்பதற்கு ஜீவாவின் பங்கு பிரதானமாகும்.

*1930.* ஜீவாவுக்கு வாய்பூட்டுச் சட்டம், மீறினர், சிறைவாசம்.

*1940ல்,* நாடு கடத்தப்பட்டார். காரைக்கால், பம்பாய், சென்ற விடமெல்லாம் அவரை சட்டம் துரத்தியது. மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார்.

*1942.* விடுதலையானர். நாடு கடத்தல்—பூதப்பாண்டியில் வாழ்க்கை-தடையை மீறிகாந்தி ஜயந்தி; கதவடைப்புக் கூட்டம், திருவாங்கூர் சர்க்கார் அளித்த ஆறுமாத தண்டனை' அக்காலத்தே—வாலிபர் இயக்கம்; தமிழர்மாநாடும் விவசாயத் தொழிலாளர் சங்கங்களையும் அமைத்தார்.

*1945ல்,* சுதந்திர ஜீவாவாக, தமிழ்மக்கள் கடலென வரவேற்க தமிழகம் திரும்பினர்.

இன்று பூரிப்பு தரும்படி சொந்தக் கட்டிடத்துடன் வளர்ந்து வரும் மதராஸ் ஹார்பார் தொழிலாளர் சங்கம், 1936ல் ஏ. எஸ். கே. ஒத்துழைப்புடன் ஜீவாவால் அமைக்

கப்பட்டது. அதே கட்டிடத்தில்தான் அமரரான ஜீவாவை பொதுமக்கள் பார்வையிட்டு அஞ்சலி செலுத்தினர்.

1946ல், கடற்படை வீரர்கள் புரட்சிக்கு ஆதரவாக நகர பொதுவேலை நிறுத்தத்தையும், ஹர்த்தாலையும் முன்னின்று நடத்தினார். விவசாயத் தொழிலாளர் இயக்கங்களை கட்டி அயராது பாடுபட்டார்.

47ம் ஆண்டு, காங்கிரஸ் மந்திரிசபை கம்யூனிஸ்டுகளை கைது செய்தபோது ஜீவா தலைமறைவாகி கட்சி வேலைகளை செய்தார்.

48ம் ஆண்டு, காங்கிரஸ் சர்க்காரின் பாதுகாப்பு கைதியானார். 51ம் ஆண்டு விடுதலை.

52ம் ஆண்டு, பொதுத் தேர்தலில் ஜீவா ஈடுபட்டு மகத்தான வெற்றி கண்டார்.

57 வரை, சட்டமன்றத்தில் ஜீவாவின் செந்தமிழ் நடையும், வாதத்திறனும்-கருத்துச் செறிவும் மன்றத்திற்கே களையூட்டின. பின்னர் நிகழ்ந்த இரு தேர்தல்களிலும் வெற்றி கிட்டவில்லையெனினும் அவர் தம் பொதுப்பணியிலிருந்து ஒரு சிறிதும் வழுவவில்லை.

ஜீவா இலங்கைக்கு ஒருமுறை விஜயம் செய்து இலங்கை மக்கட்கும், தமிழ்நாட்டு மக்களுக்கும் ஐக்கிய பலத்தை ஏற்படுத்தவும் முயற்சித்தார். தமிழ்நாட்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தின் சரித்திரத்தில் ஜீவா தனி ஒளிவீசும் தாரகையாகத் திகழ்ந்தார்.

கம்யூனிஸ இலக்கியத்தில் ஜீவா சித்தாந்தவாதியாக மட்டும் விளங்கவில்லை. இலக்கிய கம்யூனிஸ்டாக விளங்கினார். கம்யூனிஸ்ட் கவியாகத் திகழ்ந்தார். கம்யூனிஸ்ட் கலைஞனாக விளங்கினார். கம்யூனிஸ வாழ்க்கையாளனாகவே பரிமளித்தார்.

ஜீவா தான் கண்டுணர்ந்த தமிழ்க் கவிதைகளிலெல்லாம் மார்க்ஸிய சித்தாந்தங்களைப் பார்த்தார். பேசிய பேச்சுக்களிலெல்லாம் பொதுவுடமை தத்துவங்களைப் பொழிந்தார். எழுதிய எழுத்துக்களிலெல்லாம் சமதர்மச் சாறைப்பிழிந்தளித்தார்.

ஜீவா தன் காலத்தவரை—தன்னோடு வாழ்ந்தவர்களை மட்டுமே கம்யூனிஸ வாதிகளாக—பொதுவுடமையாளர்களாக மாற்றிவிட்டார் என்பதைக் காட்டிலும் வியப்பான பணிகளைப் புரிந்துள்ளார். தன் வாழ்வுக்கு முன்னால்—பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்து மறைந்த வள்ளுவப் பெருந்தகையை சமதர்மவாதியாக்கி மக்களிடையே நிறுத்தினார். கவிச்சக்ரவர்த்தி கம்பனை பொதுவுடமையாளனாகக் காட்சி அளிக்கச் செய்தார். ராமலிங்க அடிகளையும்—கவி பாரதியையும் அவர் தீவிர கம்யூனிஸ்டுகளாகவே மாற்றித் தந்த பெருமைக்கு ஆளானார்.

இலக்கியத் துறையில் ஜீவாவின் பணி மிகவும் புதிய ஒளியாகும்; போற்றுதற்குரியதாகும். 47ம் வருஷம் எட்டயபுரம் பாரதி விழாவில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவு புரட்சிகரமானதாகும். 59ம் ஆண்டு திருச்சி திருக்குறள் மகாநாட்டிலும், காரைக்குடி கம்பன் விழாக்களிலும் ஜீவாவின் தமிழ்க்குரல் என்றென்றும் எதிரொலிக்கத் தக்கவை. ஜீவாவை, இலக்கிய உலகின் ஒரு கடலென தமிழகம் பாராட்டியது.

1947ம் ஆண்டு ஜீவா சீர்திருத்த முறையில் திருமணம் செய்துகொண்டார். வாழ்வு தொடங்கிய நாளிலிருந்து வாழ்ந்து முடிந்த சோகப்படலம் வரை, அவர் எளியவராக மட்டுமல்ல ஏழையாகவே வாழ்ந்துவிட்டார். தேசசுதந்திரம் பெறவேண்டும் என்ற அவாவுக்குப் பிறகு அவருக்கேற்பட்ட ஆசை மாஸ்கோ சென்று வரவேண்டுமென்பதேயாகும். அதையும் அவர் தன் வாழ்நாளில் முடித்துக் கொண்டார்.

சதா துரு துருவென்று ஓடி ஆடி பணிபுரிந்து கொண்டிருந்த தியாகச் செம்மல் ஜீவானந்தம், திடீரென ஜனவரி 18ந் தேதி இம் மண்ணுலகை விட்டுப் பிரிந்தார். கொண்ட கொள்கையையும், லட்சியத்தையும், அருமைத்தமிழையும் நம்மிடம் விட்டுஅந்தத் தியாகச் செம்மல் பிரிந்துவிட்டார்.

**ஆம்! அமரராகிவிட்டார்.**

… … … **பிரியும் வரை** ★

## தாய்நாட்டின் சொத்து !

ஜீவா! நீங்கள் தான் இந்தியாவின் சொத்து.

*காலம்*
*1927*

*தேசப்பிதா அண்ணல்*
**காந்திஜி**

## அஞ்சா நெஞ்சம்!

அஞ்சுபவர்களும் கெஞ்சுபவர்களும் சுதந்திரத்தைப் பெறமுடியாது. ஜீவானந்தம் போன்ற சிலர் இருந்தாலே போதுமே!...

*கப்பலோட்டிய தமிழன்*
வ. உ. சிதம்பரனார்.

## இரண்டு ஜீவா போதும்

ஜீவா! உன்னைப்போல இரண்டு பேர் என் பக்கம் இருந்தால் நான் எதையும் சாதித்து விடுவேன் ...

*தேசபக்தர்*
எஸ். சத்தியமூர்த்தி.

## சுத்த வீரர்

ஜீவானந்தம் பழைய சுத்தவீரர்—நல்ல உள்ளம் மறைந்தது. வருந்துகிறேன்.

*அரசியல் மேதை*
சி. ராசகோபாலாச்சாரியார்.

## காந்தியவாதி

அன்பர் ஜீவானந்தம் நாட்டின் விடுதலைப் பணியில் ஓயாது உழைத்தவர்; உத்தமர்.

துடிக்கும் தமிழ் இதயம் ஜீவா.

துயர்படுவார் தோழன் ஜீவா.

தனி உடமை கேடுகள் மறைந்து, பொதுவுடைமை காண பொழுதெல்லாம் உழைக்கும் பெருந்தாகம் கொண்டவர் ஜீவா.

"எல்லோரும் இன்புற்றிருப்பதே யல்லாதுவேறென்றும் அறியேன் பராபரமே" எனும் பொது நோக்கு படைத்த பெருந்தகையாளர்ஜீவானந்தம். காந்தீயத்தையும், மார்க்ஸீயத்தையும் இரு கண்களாக கொண்ட உண்மையான காந்தியவாதி அவர்.

*தமிழ்ப் பெரியார்*

**திரு. வி. கல்யாணசுந்தரனார்.**

## இலக்கணம்

"பொது வாழ்க்கைக்கு வருவதற்கு முன் ஒருவருக்கு உள்ள அந்தஸ்து, பெருமை, வாய்ப்பு என்ன? அதை விட்டு, செல்லும் கடைசி நிலையில் அவரது நிலைகள் என்ன? என்பதுதான் உண்மையான பொதுத் தொண்டுக்கு அளவுகோல். இந்த சோதனைக்கு நிற்பவரது வாழ்க்கையே பொதுத் தொண்டனுக்கு இலக்கணம்"

ஜீவாவின் மரணச்செய்தி கேட்டேன். திடுக்கிட்டேன். தமிழகத்திற்கு பெரிய நஷ்டம். அவரது பிரிவால் வருந்தும் குடும்பத்தினருக்கு எனது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவியுங்கள்.

*பெரியார்*

**ஈ. வெ. ராமசாமி.**

## தீவிர தேசபக்தர்—மேதை!

"ஜீவானந்தம் மிகவும் நல்லவர். தேச விடுதலைப் போராட்டத்தில் தீவிரமாக பாடுபட்ட தேசபக்தர். தமிழில் நிறைய ஈடுபாடு கொண்டவர்.

பிறர் சொல்லக் கேட்டறிவதைவிட எதையும் படித்தறிந்து சுயமாக சிந்தித்துக்கொள்ளும் மேதை—சிந்திப்பதிலேயே வேகம் படைத்தவர்; அறிவால், அநுபவத்தால்—தேசத்தொண்டால், உயர்ந்தவர்"......

ஜீவாவின் எதிர்பாராத மரணம் எங்களை அதிர்ச்சி அடையச் செய்தது. அவரது மரணத்தால் துயர் அடைந்துள்ள உங்களுக்கு ஆழ்ந்த அநுதாபத்தை தெரிவித்துக் கொள்கின்றேன்.

கே. காமராஜ்
முகாம் : புது டெல்லி தமிழக முதலமைச்சர்.

முதலமைச்சர் சார்பாக மலர் வளையம் வைத்து இறுதி மரியாதை செலுத்தப்பட்டது.

## வாதத்தில் வல்லார் மறைந்தாரா ?

அமரர் ஜீவா அவர்களின் மறைவுச் செய்தி கேட்டுத் திடுக்கிட்ட மத்திய கனரக தொழில் துறை அமைச்சர் "இரங்கல் தந்தி" கொடுத்ததோடு, தற்பொழுது பத்மாவதி அவர்களுக்கு இரங்கல் செய்தியும் அனுப்பியுள்ளார். அந்தச் செய்தியில் அவர் கூறுவதாவது :

"தங்களது கணவர் நேற்றுக் காலை, சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் காலமானதாக அறிந்து மிக்க விசனமுற்றேன். அவரை நான் பல வருடங்களாக அரசியல் துறை

யிலும், வாழ்க்கை முறையிலும் அறிவேன். அவர் சென்னை ராஜ்ய அசெம்பிளியில் மெம்பராக இருக்கையில் அசெம்பிளியில் பலமுறை அவர் வாதத் திறமையை வியந்ததுண்டு. அவரது மறைவால் துயரமுற்றிருக்கும், தங்களுக்கும், ஏனைய சுற்றத்தாருக்கும், எனது ஆழ்ந்த அநுதாபங்கள்."

ஜன. 21. சி. சுப்ரமண்யம்
புதுடில்லி : மத்திய கனரகத் தொழில் அமைச்சர்

## விடுதலைப் போராட்ட வீரர்

ஜீவானந்தம்மறைவுச் செய்திகேட்டு அதிர்ச்சி அடைந்தேன். சொல்லமுடியாத வேதனை அடைந்தேன். திருமதி ஜீவானந்தத்திற்கு எனது அநுதாபங்களைத் தெரிவியுங்கள். ஜீவா சிறந்த நாட்டுப்பற்று மிக்க தேசபக்தர். விடுதலைப் போராட்ட வீரர். எல்லாருடனும் சிரித்த முகத்துடன் பழகும் தனிப்பண்பு பெற்றவர். அவர் மறைவுக்கு அஞ்சலி செலுத்துகிறேன்.

எம். பக்தவத்சலம்
முகாம் : ராமேஸ்வரம். தமிழக கல்வி, நிதி, அமைச்சர்

## சென்னை நகரமக்கள் அஞ்சலி

திரு. ஜீவானந்தம் ஒரு பெரிய சமூக சீர்திருத்தவாதி. பொதுவுடமைக் கொள்கையின் ஏற்றத்திற்காக அயராது பாடுபட்டவர். பெரிய தொழிற்சங்கத் தலைவர். நல்ல பேச்சாளர்—எழுத்தாளர். அவரது மறைவு தமிழகத்திற்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும்.

சென்னை நகரமக்களின் சார்பாக நான் அமரர் ஜீவாவிற்கு அஞ்சலி செலுத்துகின்றேன்.

ஜி. குசேலர்
சென்னை நகர மேயர்.

## எழுதப்படாத காவியம் என் அருமை ஜீவா !

ஜீவா அவர்களின் மறைவுச் செய்தி கேட்டு திடுக்கிட்டேன். நெல்லையிலிருந்து சுற்றுப்பயணங்களை ரத்து செய்துவிட்டு ஓடோடி வந்தேன். தமிழகம் மாபெரும் ஒரு வீரனை இழந்தது. உழைத்தார், உழைத்தார்; உழைத்துக் கொண்டே இருந்தார். அவரது மரணம் கண்டு நான் பொறாமைப்படுகிறேன். பாட்டாளிகளின் நலம் காணப் பாடுபட்ட தலைவன் பாட்டெழுதிய பாவலன் மறைந்து விட்டார். இல்லை, உழைப்பிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார். இந்த வேதனை மறைய எனக்கு நெடுநாள் பிடிக்கும்.

" ஜீவானந்தத்தின் 60ம் ஆண்டு மணிவிழாவினை நானே தலைவனாக இருந்து நடத்த விரும்பினேன். ஆனால் மயானத்தில் பேச வேண்டி ஏற்பட்டது. கருத்துப்போர்கள் இருந்தாலும் பண்போடு பழகும் பண்பாளர் அவர். தேசீய இயக்கத்திலும், தமிழ்ப்பணியிலும் அவர் வ. உ. சி. திரு. வி. க. முதலானோருடன் ஒப்பிடத் தகுந்தவர். அவர்களிடமில்லாத சில தனித் தன்மைகளையும் ஜீவா பெற்றிருந்தார். ஜீவாவின் வரலாறு, எழுதப்படாத காப்பியம். அவர் பாட்டாளி வர்க்க ஜீவா. உண்மையான மனிதன். மறந்தும் இன்னொன்றை மனதில் வைத்துப் பேசமாட்டார். பரிசுத்தமான இருதயம், வீரசுவர்க்கம் என்று ஒன்று இருந்தால்; ஜீவா அங்குதான் இருப்பார். தமிழ் நாட்டு வீரன் என்ற முறையில் ஜீவா கட்டபொம்மன் வழியில் வந்தவர். ஜீவாவை எனது மூத்த சகோதரராகவே மதிக்கிறேன். சென்ற ஆண்டு எனது தாய் தந்தையரைப் பறிகொடுத்தேன். இந்த ஆண்டு எனது மூத்தசகோதரனை இழந்தேன்.

துள்ளித் துடிக்கும் அவரது மனைவிக்கும் இளமையிலேயே தந்தையைப் பறிகொடுத்த மக்களுக்கும், அரும்

பெரும் தலைவனை இழந்த கம்யூனிஸ்டு கட்சிக்கும், தமிழ ரசுக் கழகத்தின் சார்பாக ஆழ்ந்த அனுதாபத்தை செலுத்து கிறேன்.

தமிழரசுக்கழகத் தலைவர் ம. பொ. சிவஞானம்.

## ஒளி மறைந்தது இருள் சூழ்ந்தது

நண்பர் ஜீவானந்தம் அவர்களின் திடீர்மறைவு கேட்டு பெரிதும் திடுக்கிட்டுப் போனேன். பொது வாழ்வுத் துறை யினர் அனைவருமே இதனை ஈடு செய்யமுடியாத பெரும் இழப்பு என்றே கருதுவர்—திடுக்கிட்டுப் போயிருப்பர்.

கடந்த நாற்பது ஆண்டுகளாகத் தோழர் ஜீவானந்தம் அவர்கள் தன்னலமற்ற தொண்டாற்றி, பொது வாழ்வுத் துறையினருக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கி வந்தார். பொதுமக்களின் போற்றுதலைப் பெற்றுத்திகழ்ந்து வந்தார். அவருடைய சண்டமாருதப் பேச்சினால் தமிழ் மக்கள் பெற்றக் கருத்துக் கருவூலமும், உணர்ச்சிப் பெருக்கும் அள விடற்கரியதாகும்.

சுயமரியாதை இயக்கக் கருத்துக்களைப் பரப்பியவர் களிலே முன்வரிசையில் சிறப்பிடம்பெற்றவராகப்பணியாற் றிய தோழர் ஜீவானந்தம் அவர்கள், தொடர்ந்து முற் போக்குக் கருத்துக்களை மக்களிடம் செலுத்தி அவர்தம் வாழ்க்கை செம்மையுறப் பாடுபட்டு வந்தார்.

பொதுவுடமை இயக்கத்திற்கு அவர் ஆற்றிய அரும் பணியின் காரணமாக மக்கள் பெற்ற தெளிவும், ஆதிக்கக் காரர்கள் கொண்ட மருட்சியும் கொஞ்சமல்ல.

ஓயாமல், தமது சக்தி முழுவதையும் பொதுத் தொண் டுக்கே அளித்த பெருவீரராக விளங்கி வந்தார்.

எதிர்ப்புக்களைக் கண்டு துளியும் அஞ்சும் போக்கு அவரை அணுக அஞ்சும். கொள்கையிலே அவருக்கிருந்த அழுத்தமான நம்பிக்கையும் அதனை எடுத்து விளக்குவதில் அவர் பெற்றிருந்த திறமையும், எவரும் கண்டு வியக்கத் தக்கதாக இருந்தது.

எந்த பொதுநலத் தொண்டரையும் கலங்க வைக்கக் கூடிய எத்தனையோ வகையான கொடுமை மிகு அடக்கு முறைகளை அவர் கண்டவர்; அவைகளைத் தாங்கிக்கொண்டவர்; வென்றவர்!

அவருடைய உடல் நலம் சில ஆண்டுகளாக பாதிக்கப் பட்டு, இளைத்தும் களைத்தும் போயினார் என்றாலும், உணர்ச்சி அவரை எப்போதும் செயலாற்றும் வீரராகஇருக்கச் செய்தது. அந்த உழைப்பு வீண் போகவில்லை என்றா லும் அந்த ஒயாத உழைப்புதான் அவர் உயிரைக் குடித்தது என்று கூறலாம்.

தன்னைப்பற்றிய சிந்தனை துளியுமற்ற முறையில் தொண்டாற்றிய அந்தத் தூயவரின் மறைவு. நீக்கப்பட முடியாத துயரத்தை நம் அனைவர் உள்ளத்திலும் மூட்டி விட்டிருக்கிறது.

அவர் ஆற்றிய அருந்தொண்டின் சிறப்பினையும் பயனை யும் எண்ணி, எண்ணி நாம் சிறிதளவு ஆறுதல் தேடிக் கொள்ளலாம் என்றாலும் இந்தத் துயரம் நெஞ்சை விட்டு அகலுவது மிகக் கடினமாகும்.

சமதர்ம சிறப்பினுக்குப் பணியாற்றி வந்த தோழர் ஜீவானந்தம் அவர்கள் தமிழ் மொழிக்கும் நல்லதோர் தொண்டாற்றி வந்தார்கள்.

அவர்களின் கொள்கை விளக்கம், வெண்கலக் குர லொலியுடன் தமிழகத்துக்குப் பல ஆண்டுகள் கிடைத்து வந்தது.

அவருடைய 'சம்மட்டி அடிகளை'ப் பெற்று சரிந்த சூதுக் கோட்டைகள் பல பல!

அவருடைய ஓயாத உழைப்பினால் மக்கள்மன்றம் பெற்ற உயர் தனிக் கருத்துக்கள் பல பல!

அவர் பேசாத நாளில்லை—போகாத ஊர் இல்லை—காணாத எதிர்ப்பு இல்லை—பெறாத சீர்மிகு வெற்றி இல்லை.

ஒளிவிடு கணைபோல் விளங்கி வந்தார். அந்த ஒளியால் தமிழகம் புதுப் பொலிவு பெற்றது.

ஒளி மறைந்ததால், அவருடைய இல்லமாக அவர் கொண்டிருந்த தமிழகம் இருள் சூழ்ந்த நிலை பெற்றிருக்கிறது.

மறைந்த மாவீரருடைய குடும்பத்தினருக்கு என் ஆழ்ந்த அனுதாபத்தையும் தி. மு. கழகத்தின் அனுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சி. என். அண்ணாதுரை, M. A. M. P.
தி. மு. க. பொதுச் செயலாளர்

## தமிழ்ப் பெருமகன்

தோழர் ஜீவானந்தம் அவர்களின் திடீர் மறைவு தமிழகத்தையே பெரும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தமிழகத்து பொது வாழ்வில் கடந்த 30 ஆண்டு காலமாக தொடர்ந்து ஒளிபட தொண்டாற்றிய தலைவர் அவர்.

இலக்கியத்தில் நல்ல தேர்ச்சியும், தணியாத தமிழ் ஆர்வமும் வலிமை மிக்க சொல்லாற்றலும் கொண்ட தமிழ்ப் பெருமகன். அவரது சலியாத உழைப்பும், தியாக உள்ளமும் பொதுத் தொண்டர்களுக்கு ஒரு முன் மாதிரி.

அவரது இழப்பு தமிழுக்கும் தமிழகத்து பொது வாழ்வுக்கும் ஏற்பட்ட பேரிழப்பாகும்.

தமிழ் தேசியக் கட்சித் தலைவர் **ஈ. வெ. கி. சம்பத்.**

## மனிதப் பண்பின் இலக்கணம் ஜீவா!

நாஞ்சில் நாடு ஜீவாவை உலகிற்குப் பெற்றுக் கொடுத்தது. ஆனால்; அரசியல், கலை, இலக்கியத்துறைக்கு அளித்தது காரைக்குடிப் பகுதியே. எனக்கும் ஜீவாவிற்கும் 40 ஆண்டுகால தொடர்புண்டு.

ஜீவா உலகிற்கு முதலில் ஆசிரியராக வெளிவந்தார். ஜீவாதான் மெய்யாகக் கொண்ட கொள்கையில் ஊக்கமும், உறுதியான பிடிப்பும் அதேகாலத்தில் நேர்மையும் கொண்டு விளங்கினார். அரசியல் ஞானியாயும், இலக்கியமேதையாயும் திகழ்ந்த அவர் எல்லாவற்றையும்விட மனிதப்பண்பின் இலக்கணமாக விளங்கினார். சுருங்கச்சொன்னால் அவர் மனிதனாக வாழ்ந்தார்.

அவருடைய இழப்பு தமிழகத்துக்கே மிகப் பெரிய இழப்பாகும். நான் நம்பும் மறுபிறவியில் நம்பிக்கைவைத்துக்கூறுகிறேன். மீண்டும் அவர் நம்மிடையே பிறந்து அவரது சகல குணங்களும் நம் தமிழகத்துக்கு மீண்டும் பயன்படவேண்டும். அவர் ஆத்மா சாந்தியடைக.

தமிழக சுதந்திரக் கட்சி தலைவர், **சா. கணேசன்.**

## பெருந்தகையாளர் ஜீவா!

வாழ்க்கை முழுவதும்தான் வாடி பிறர் நலம் பேணிய பெருந்தகையாளர் ஜீவா. ஜீவா சுதந்திரப் போராட்டத்திலும், சோஷலிஸ இயக்கத்திலும் பெரும் பங்கேற்றவர்.

'காலுக்குச் செருப்புமில்லை, கால்வயிற்றுக் கூழுமில்லை, என்ற ஜீவாவின் பாட்டு அக்காலத்தில் லட்சக்கணக்கான ஏழைத்தொழிலாளிகளை போராட்டத்தில் குதிக்க வைத்தது காலுக்கு செருப்புமில்லை என்று ஜீவா பாடியதில் எவ்வளவோ உண்மைகள் பொதிந்துகிடக்கின்றன. காலுக்குச் செருப்பில்லாமல் வேறு நாடுகளில் யாருமில்லை. இந்தியாவில்கூட தென்பகுதியில்தான் மக்கள் செருப்பில்லாமல் நடக்கிறார்கள். அதனால்தான் ஜீவா அவ்வாறு பாடினார். அவர் குடும்பத்ினருக்கு என் ஆழ்ந்த அனுதாபங்கள் உரித்தாகுக.

பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி. எஸ். ஏ. ரஹீம்

## எங்கள் வழிகாட்டி !

ஜீவா என்னைப் போன்றவர்களுக்கு பொதுவாழ்வில் வழிகாட்டியாக விளங்கினார். பள்ளியில் 10-வது வகுப்பில் பயின்று கொண்டிருந்தபோதே, புத்தகங்களைத் தூக்கி எறிந்துவிட்டு தேசியப் போராட்டத்தில் குதித்தார்.

தேசியத் தொண்டராக—சுயமரியாதைக் தொண்டராக, சமதர்ம சுயமரியாதை தொண்டராக, சோஷலிஸ்ட் தொண்டராக, கம்யூனிஸ்டு தொண்டராக, தமிழ்த் தொண்டராக அவர் அரும்பணி ஆற்றினார்.

ஜீவா ஒரு உண்மையான லட்சியவாதி, கம்யூனிஸ்ட் எப்படி வாழவேண்டும் என்பதற்கு இலக்கணமாய்த் திகழ்ந்தவர். ஏனெனில் கம்யூனிஸ்டுகளுக்கு தனி வாழ்க்கை என்பதில்லை. சமுதாய மக்களின் வாழ்க்கையோடு தன் வாழ்வு உயரவேண்டுமேயன்றி தனிப்பட்ட முறையில் அவனுக்கு வாழ்க்கை கிடையாது என்பதை வாழ்ந்துகாட்டி, ஒரு கம்யூனிஸ்ட் எப்படி வாழ்ந்து மறைய வேண்டும் என்பதை எடுத்துக்காட்டிச் சென்றார், ஜீவா.

எங்களுக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்கிவந்த ஜீவா சொல்லொணு துயரத்தில் எங்களை ஆழ்த்திவிட்டு மறைந்து விட்டார். ஆயினும், அவர் விட்டுச்சென்ற பணியை தொடர்ந்து நிறைவேற்றுவோம்—அவரது கொள்கைகளை அசைக்க முடியாத கோட்டைகளாக்க, தொடர்ந்து கடுமையாக உழைப்போம் என உறுதி எடுப்போமாக.

கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் **மணலி கந்தசாமி.**

## நிரப்ப முடியுமா ?

சென்னை நகர முற்போக்காளர்கள் ஆதரவில் பலபகுதிகளிலும் தொடர்ச்சியாக இந்த மாதம் கூட்டங்கள் நடத்தினேம். ஜனவரி 11, 12ந் தேதி வரையிலும் கூட ஜீவா அவர்கள் அக்கூட்டங்களில் கலந்து கொண்டு பெரிய விஷயங்களை எடுத்துச் சொல்லி பொது மக்களுக்கு வழி காட்டினர். 12-ந் தேதி இரண்டு கூட்டங்களில் பேசினர். அதனல்தான் அவர் உடல்நிலை பாதிக்கப்பட்டு விட்டதோ என்று எண்ணி துயரப்படுகிறேன்.

சர்வகட்சி கூட்டங்கள் என்றாலே ஜீவாதான் இருப்பார். அவர் இல்லாத கூட்டத்தில் மகிமை ஏது? அவரது இழப்பால் ஏற்பட்ட காலி இடத்தை யாராலும் நிரப்ப முடியாது என்பதை உணரும்போதுதான் எங்களுக்கு துயர மேலிடுகிறது.

சென்னை நகர முற்போக்காளர் **தி. க. லோகநாதன்**

## ஜீவன் மறைந்தது !

முப்பது ஆண்டுகளுக்கு முன்னல் ஜீவாவை எப்படிக் கண்டேனே அவரது உருவம், உள்ளம், செயல் யாவையும் அப்படியே இறுதி வரை கண்டேன். எத்தனையோ தலைவர்

கள், பேச்சாளர்கள், கவிஞர்கள் வந்துபோனுர்கள். ஆனுல் அவர்களில் ஜீவா தனிமேதை. தனி மிடுக்கு உடையவர். அவர் ஒவ்வொரு சொல்லிலும் அவருக்கேஉரித்தான வேகம் மிடுக்கு, புரட்சியைக் கண்டோம். பாரத அன்னை தன் தவப்புதல்வனை இழந்து விட்டாள். இன்று இங்குமட்டு மல்ல; தமிழக முழுமையும் லட்சக்கணக்கான மக்கள் அழு கின்றனர். அவர் உணர்வின் ஊற்று. புரட்சியின் கரு. அவரது பேச்சு எத்தனையோபேரை வீரராக்கியது. தொழி லாளியை தலை நிமிர்ந்து நடக்கச் செய்தது. அவரது தன் னலமற்ற பொதுப்பணி இன்று நம்மையெல்லாம் கூட்டி அழவைத்திருக்கிறது. எத்தனையோ தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி பெற்றதென்ருல் அதற்கு ஜீவாதான் காரணம்.

சர்வோதய வாதிகளை உலக முற்போக்கு இயக்கங் களோடு இணைக்கப் பாடுபட்டார். அவர் சர்வோதய மாநாடுகளில் நிகழ்த்திய உரை தனி சர்வோதய இலக்கிய மாகும். அவரது ஆதர்சம்தான் என்னைப்போன்றவைகளை பேசவைத்தது. ஒரு நாள் வரும் ; ஜீவாவின் வரலாறு உல கம் முழுமையும் பரப்பபடுகின்ற ஒரு நாள் வரும்.

'தம்பி' என்று அவர் உள்ளன்போடு இதயத்தின் அடித்தளத்திலிருந்து அழைப்பாரே! சொந்த அண்ணன்கூட அவ்வாறு அழைக்க முடியாது. நம்மை எல்லாம் இணைக் கும் ஜீவனுக விளங்கிய ஜீவன் மறைந்து விட்டது. என்ரு லும் இன்னும் அவரது பொன்னுடல் நம்முடன் நடமாடு வதுபோன்றுதான் உணருகிறேன். தமிழகச் சர்வோதய இயக்கத்தினர் சார்பாக அஞ்சலி செலுத்துகிறேன்.

சர்வோதய இயக்கம் எஸ். ஆர். சுப்பிரமணியம்

## மக்கட்கு நஷ்டம்

திரு ஜீவானந்தம் அவர்களின் மறைவு ஏழைமக்களுக்கு ப் பெரிய நஷ்டமாகும். அவரது ஆத்மா சாந்தியடைக. ன் ஆழ்ந்த அனுதாபங்கள்.

பூதான போர்டு தலைவர், அருணாசலம்.

## முன்னணி வீரர்

" உலகில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்ட கால ட்டத்தில் நாங்கள் அரசியலுக்கு வந்தோம். நானும் ஜீவா பும் ஒரே தலை முறையைச்சேர்ந்தவர்கள். ஜீவாவை இழந்த ன் மூலம் சோஷலிஸத்திற்காகப்போராடும் சகதோழரை இழந்து விட்டோம். அவர் நாட்டுக்கும் உலகத்துக்கும் தேவைப்படும் சமயத்தில் மறைந்து விட்டாரே என்று நினைக்கும் போதுதான் எனக்கு மிகவும் வருத்தமேற்படு கிறது.

உலகிலும் நமது நாட்டிலும் முற்போக்கு சக்திகளுக் கும் பிற்போக்கு சக்திகளுக்குமிடையில் கடுமையான போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போது, முற்போக்கு சக்திகளின் முன்னணியில் நின்ற நண்பர். ஜீவானந்தம் இறந்து போனது முற்போக்கு சக்திகளுக்குப் பேரிழப்பாகி விட்டது.

நான் சார்ந்திருக்கும் தமிழ்த் தேசியக்கட்சி சார்பிலும் நான் பணியாற்றும் சகல தொழிற் சங்கங்களின் சார்பிலும் மறைந்த தலைவர் ஜீவாவுக்கு தலைவணங்கி மரியாதை செய் கிறேன். ஜீவாவைப் பிரிந்து வாடும் அவரது மனைவியார்க் கும் குழந்தைகளுக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.

தொழிற்சங்கத் தலைவர் எஸ். சி. சி. அந்தோணியார்.

கள், பேச்சாளர்கள், கவிஞர்கள் வந்துபோனார்கள். ஆனால் அவர்களில் ஜீவா தனிமேதை. தனி மிடுக்கு உடையவர். அவர் ஒவ்வொரு சொல்லிலும் அவருக்கேஉரித்தான வேகம் மிடுக்கு, புரட்சியைக் கண்டோம். பாரத அன்னை தன் தவப்புதல்வனை இழந்து விட்டாள். இன்று இங்குமட்டு மல்ல; தமிழக முழுமையும் லட்சக்கணக்கான மக்கள் அழு கின்றனர். அவர் உணர்வின் ஊற்று. புரட்சியின் கரு. அவரது பேச்சு எத்தனையோபேரை வீரராக்கியது. தொழி லாளியை தலை நிமிர்ந்து நடக்கச் செய்தது. அவரது தன் னலமற்ற பொதுப்பணி இன்று நம்மையெல்லாம் கூட்டி அழவைத்திருக்கிறது. எத்தனையோ தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி பெற்றதென்றால் அதற்கு ஜீவாதான் காரணம்.

சர்வோதய வாதிகளை உலக முற்போக்கு இயக்கங் களோடு இணைக்கப் பாடுபட்டார். அவர் சர்வோதய மாநாடுகளில் நிகழ்த்திய உரை தனி சர்வோதய இலக்கிய மாகும். அவரது ஆதர்சம்தான் என்னைப்போன்றவைகளை பேசவைத்தது. ஒரு நாள் வரும்; ஜீவாவின் வரலாறு உல கம் முழுமையும் பரப்பப்படுகின்ற ஒரு நாள் வரும்.

'தம்பி' என்று அவர் உள்ளன்போடு இதயத்தின் அடித்தளத்திலிருந்து அழைப்பாரே! சொந்த அண்ணன்கூட அவ்வாறு அழைக்க முடியாது. நம்மை எல்லாம் இணைக் கும் ஜீவனாக விளங்கிய ஜீவன் மறைந்து விட்டது. என்றா லும் இன்னும் அவரது பொன்னுடல் நம்முடன் நடமாடு வதுபோன்றுதான் உணருகிறேன். தமிழகச் சர்வோதய இயக்கத்தினர் சார்பாக அஞ்சலி செலுத்துகிறேன்.

சர்வோதய இயக்கம் **எஸ். ஆர். சுப்பிரமணியம்**

## மக்கட்கு நஷ்டம்

*திரு ஜீவானந்தம் அவர்களின் மறைவு ஏழைமக்களுக்குப் பெரிய நஷ்டமாகும். அவரது ஆத்மா சாந்தியடைக. என் ஆழ்ந்த அனுதாபங்கள்.*

பூதான போர்டு தலைவர், அருணசலம்.

## முன்னணி வீரர்

*" உலகில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்ட காலகட்டத்தில் நாங்கள் அரசியலுக்கு வந்தோம். நானும் ஜீவாவும் ஒரே தலை முறையைச்சேர்ந்தவர்கள். ஜீவாவை இழந்ததின் மூலம் சோஷலிஸத்திற்காகப்போராடும் சகதோழரை இழந்து விட்டோம். அவர் நாட்டுக்கும் உலகத்துக்கும் தேவைப்படும் சமயத்தில் மறைந்து விட்டாரே என்று நினைக்கும் போதுதான் எனக்கு மிகவும் வருத்தமேற்படுகிறது.*

*உலகிலும் நமது நாட்டிலும் முற்போக்கு சக்திகளுக்கும் பிற்போக்கு சக்திகளுக்குமிடையில் கடுமையான போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போது, முற்போக்கு சக்திகளின் முன்னணியில் நின்ற நண்பர். ஜீவானந்தம் இறந்து போனது முற்போக்கு சக்திகளுக்குப் பேரிழப்பாகி விட்டது.*

*நான் சார்ந்திருக்கும் தமிழ்த் தேசியக்கட்சி சார்பிலும் நான் பணியாற்றும் சகல தொழிற் சங்கங்களின் சார்பிலும் மறைந்த தலைவர் ஜீவாவுக்கு தலைவணங்கி மரியாதை செய்கிறேன். ஜீவாவைப் பிரிந்து வாடும் அவரது மனைவியார்க்கும் குழந்தைகளுக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.*

*தொழிற்சங்கத் தலைவர்* எஸ். சி. சி. அந்தோணியார்.

கள், பேச்சாளர்கள், கவிஞர்கள் வந்துபோனார்கள். ஆனால் அவர்களில் ஜீவா தனிமேதை. தனி மிடுக்கு உடையவர். அவர் ஒவ்வொரு சொல்லிலும் அவருக்கேஉரித்தான வேகம் மிடுக்கு, புரட்சியைக் கண்டோம். பாரத அன்னை தன் தவப்புதல்வனை இழந்து விட்டாள். இன்று இங்குமட்டு மல்ல; தமிழக முழுமையும் லட்சக்கணக்கான மக்கள் அழு கின்றனர். அவர் உணர்வின் ஊற்று. புரட்சியின் கரு. அவரது பேச்சு எத்தனையோபேரை வீரராக்கியது. தொழி லாளியை தலை நிமிர்ந்து நடக்கச் செய்தது. அவரது தன் னலமற்ற பொதுப்பணி இன்று நம்மையெல்லாம் கூட்டி அழவைத்திருக்கிறது. எத்தனையோ தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி பெற்றதென்றால் அதற்கு ஜீவாதான் காரணம்.

சர்வோதய வாதிகளை உலக முற்போக்கு இயக்கங் களோடு இணைக்கப் பாடுபட்டார். அவர் சர்வோதய மாநாடுகளில் நிகழ்த்திய உரை தனி சர்வோதய இலக்கிய மாகும். அவரது ஆதர்சம்தான் என்னைப்போன்றவைகளை பேசவைத்தது. ஒரு நாள் வரும்; ஜீவாவின் வரலாறு உல கம் முழுமையும் பரப்பப்படுகின்ற ஒரு நாள் வரும்.

'தம்பி' என்று அவர் உள்ளன்போடு இதயத்தின் அடித்தளத்திலிருந்து அழைப்பாரே! சொந்த அண்ணன் கூட அவ்வாறு அழைக்க முடியாது. நம்மை எல்லாம் இணைக் கும் ஜீவனாக விளங்கிய ஜீவன் மறைந்து விட்டது. என்றா லும் இன்னும் அவரது பொன்னுடல் நம்முடன் நடமாடு வதுபோன்றுதான் உணருகிறேன். தமிழகச் சர்வோதய இயக்கத்தினர் சார்பாக அஞ்சலி செலுத்துகிறேன்.

சர்வோதய இயக்கம் எஸ். ஆர். சுப்பிரமணியம்

## மக்கட்கு நஷ்டம்

திரு ஜீவானந்தம் அவர்களின் மறைவு ஏழைமக்களுக்குப் பெரிய நஷ்டமாகும். அவரது ஆத்மா சாந்தியடைக. என் ஆழ்ந்த அனுதாபங்கள்.

பூதான போர்டு தலைவர், அருணாசலம்.

## முன்னணி வீரர்

" உலகில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்ட கால கட்டத்தில் நாங்கள் அரசியலுக்கு வந்தோம். நானும் ஜீவாவும் ஒரே தலை முறையைச்சேர்ந்தவர்கள். ஜீவாவை இழந்ததின் மூலம் சோஷலிஸத்திற்காகப்போராடும் சகதோழரை இழந்து விட்டோம். அவர் நாட்டுக்கும் உலகத்துக்கும் தேவைப்படும் சமயத்தில் மறைந்து விட்டாரே என்று நினைக்கும் போதுதான் எனக்கு மிகவும் வருத்தமேற்படு

உலகிலும் நமது நாட்டிலும் முற்போக்கு சக்திகளுக்கும் பிற்போக்கு சக்திகளுக்குமிடையில் கடுமையான போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போது, முற்போக்கு சக்திகளின் முன்னணியில் நின்ற நண்பர். ஜீவானந்தம் இறந்து போனது முற்போக்கு சக்திகளுக்குப் பேரிழப்பாகி விட்டது.

நான் சார்ந்திருக்கும் தமிழ்த் தேசியக்கட்சி சார்பிலும் நான் பணியாற்றும் சகல தொழிற் சங்கங்களின் சார்பிலும் மறைந்த தலைவர் ஜீவாவுக்கு தலைவணங்கி மரியாதை செய்கிறேன். ஜீவாவைப் பிரிந்து வாடும் அவரது மனைவியார்க்கும் குழந்தைகளுக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.

தொழிற்சங்கத் தலைவர் எஸ். சி. சி. அந்தோணியார்.

## வெற்றித் திருமகன்

*தமிழ்நாடு பொதுவுடமைக் கட்சியின் தூண்களில் ஒன்ருன திரு. ஜீவானந்தம் மறைந்தது தமிழ்நாடு தொழிலாளர் வர்க்கத்திற்கும், தமிழ் இலக்கியத்திற்கும் ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.*

*தேச விடுதலைக்காக போரிட்டவர் திரு. ஜீவானந்தம். அதில் வெற்றி கண்டவர்களில் அவரும் ஒருவர். தேச ஒற்றுமையை நிலை நாட்டுவதில் கடைசி மூச்சுவரை அவர் பாடுபட்டு வந்தார். சிறந்த தேசபக்தரை, நல்ல தமிழ் எழுத்தாளரை, சமூக முன்னேற்றவாதியை நாம் இழந்துள்ளது தமிழ் நாட்டிற்கே மாபெரும் நஷ்டமாகும்.*

**சென்னை மாவட்ட காங்கிரஸ் கட்சித் தலைவர்: கே. ராமதாஸ்.**
M.L.C.

## ஜீவசக்தி ஜீவா!

*தோழர் ஜீவாவின் மறைவு நாட்டிற்கும், நல்லவர்களுக்கும் ஏற்பட்ட பெருநஷ்டம்; ஈடுசெய்ய முடியாதது. ஜீவா, குமரி எல்லை தேசத்திற்களித்த 'ஜீவசக்தி,' அந்த சக்தியின் அணைப்பிலே தேசம் திளைப்பது கண்டு குமரி மக்கள் பெருமிதம் கொண்டனர். ஜீவாவின் அறிவுத் திறனும், சாதுரியச் சொல்வன்மையும் அவரை லட்சிய புருஷனுக விளங்க வைத்தது.*

*குமரி வரலாற்றில் சோதனைகள் மலிந்த வேளைகளில் ஜீவா இங்கு விரைந்து வருவார். மக்களுக்கு வழி காட்டினுர். அவரின் வருகை மக்களுக்கு ஆறுதல் அளிக்கத் தவறியதில்லை.*

*அரசியலில் அவரும் நானும் மாறுபட்ட கருத்துடையவர்கள். ஆனுல் மக்களின் வாழ்வுப் பிரச்னைகளை அரசி*

யலில் எல்லைகளுக்கு அப்பால் நின்று அன்பு உள்ளத்துடன் ஆயும் அவரது பண்பால் நாங்கள் மாறாத நட்பினால் பிணைக்கப்பட்டிருந்தோம்.

ஜீவாவின் மரணத்தினால் நான் உத்தம நண்பரை இழந்துவிட்டேன்; குமரி மக்கள் தங்கள் ஆதர்ச புருஷனை இழந்துவிட்டார்கள்; நாடு நல்லதோர் தலைவரை இழந்து விட்டது. இந்தத் துயரத்தில் நானும் பங்கு கொள்கிறேன். ஜீவாவின் நல் இயல்புகளும், சாதனைகளும் நமக்கு ஆறுதல் தருமாக.

—ஏ. நேசமணி, எம்.பி.

## வெண்ணிலவு விழுந்துவிட்டது !

எனதருமை ஜீவா !

உனது சரித்திரம் முடிந்துவிட்டது.

உனது திருமேனி எரிந்து விட்டது.

உன் பிரிவு நேரும் என்று எதிர்பாராத போதே அது நேர்ந்துவிட்டது.

இலைகள் சருகாவதும் மலர்கள் கருகி விடுவதும், மரங்கள் பட்டுப்போவதும், மனிதன் இறந்துபோவதும் மாற்ற முடியாத இயற்கையின் விதிதான்.

ஆனால் வாழ வேண்டியவர்கள் என்று சமூகம் கருதுகின்ற மனிதர்கள் மறைந்து போவதும், வாழத் தேவையில்லாத மனிதர்கள் வாழ்ந்துகொண்டிருப்பதும் இயற்கையின் வேடிக்கையே !

" உடலுக்கு மட்டும்தான் உயரமும், கனமும், உயிர் எல்லோருக்கும் ஒரே மாதிரிதான் " என்கிறது உலகம்.

நான் அப்படிக் கருதவில்லை.

உயிர்களில் பெரிய உயிர்களும் சிறிய உயிர்களும் உண்டு.

யாருடையபிரிவு சமுதாயம் முழுவதையும் வருத்துமோ, அது பெரிய உயிரின் பிரிவாகும்.

யாருடைய பிரிவு உறவினரை மட்டும் வருத்துமோ அது சிறிய உயிரின் பிரிவாகும்.

நேற்று மலையிருந்த இடத்தில், இன்று அது இல்லை யென்றால் உலகுக்கு அது திகைப்பை ஊட்டும்.

நேற்று கடுகிருந்த பாத்திரத்தில் இன்று அது இல்லை யென்றால் அதற்குரியவன் மட்டுமே கண நேரம் கவலைப்படு வான்.

உனது பிரிவு மலை காணமற் போன செய்தியாகும்.

உனது பிரிவு கடல் வற்றிப்போன செய்தியாகும்.

நட்சத்திரங்கள் உதிர்ந்து போவது உலகுக்குச் செய்தி யல்ல.

உனது பிரிவு வெண்ணிலவு விழுந்து விட்ட செய்தி யாகும்.

என்னருமை ஜீவா !

சரியான உழைப்பாளி ஒருவன் சாவின் அரசாங்கத் திற்குத் தேவை என்று அது உன்னைக் கொண்டு போய்விட் டதா ?

எனக்குத் தெரியும்—மரணம் என்பது ஒரு உலகம் தான் என்றால், இறப்போர் உயிர் அந்தஉலகத்திற்குத்தான் போகிறதென்றால், உன் உயிரும் அங்கேதான் போயிருக்கிற தென்றால், அங்கேயும் உனக்கு ஓய்வு கிடைக்காது.

உழைப்பவன் எங்கேயும் உழைத்துக் கொண்டுதான் இருப்பான் ;

ஜீவா !

அந்தப் பாட்டு எங்கே ஜீவா ?

அந்தப்பேச்சு எங்கே ஜீவா ?

மேடையிலே புலிபோல் அங்குமிங்கும் பாய்ந்து சுழலுமே அந்த மேனி எங்கே ஜீவா ?

முதல் நாள் தானே நான் பார்த்தேன்.

ஒரு கூட்டத்தில் பேசிவிட்டு இன்னொருகூட்டத்திற்குப் போகும் வழியில் நீ என்னென்ன சொன்னாய் ?

"நான் அதிகம் உடம்பை அலட்டிக்கொண்டு பேசுகிறேன் : இப்படி முப்பது வருஷம் பேசி விட்டேன் ; இனி நீங்களெல்லாம் பேசவேண்டும்" என்றாயே ஏன் ?

நாளை வரை நாம் உயிரோடியிருக்க மாட்டோம் என்று அப்போதே உனக்குத் தெரிந்து விட்டதா ?

'சம்பத் உடல் நிலை தேறவேண்டும்' என்று தலையங்கம் தீட்டி நாலுநாளாக வில்லையே; இந்த நேரத்தில் உத்தமமான தலைவர்களெல்லாம் உயிரோடிருக்க வேண்டும் என்றுதானே அதை எழுதினாய் ?

அந்த ஆசை உன்மீது எங்களுக்கில்லையா ஜீவா !

ஜீவா !

நீ இறந்துவிட்டதாக எண்ணிக்கூடப் பார்க்கமுடியவில்லையே என்னால் !

இன்னும் இருப்பது போலத்தானே என் கண்களுக்குத் தெரிகிறது.

'19-ம் தேதி தாம்பரம், கூட்டம் மறந்து விடாதீர்கள்' என்று ஞாபகப் படுத்திவிட்டு 18-ம் தேதி சொல்லாமல் போய் விட்டாயா ஜீவா !

தவழ்ந்து திரிந்துகொண்டிருந்த ஒரு குழந்தைகாணுமல் பாய்விட்டதைப் போலவே எனக்குத் தோன்றுகிறதே ன் ?

ஒரு நாள் பழகினுலும் உயிரோடு அணைத்துக்கொண்டு டும் ஆற்றலை நீ எவ்வாறு பெற்ருய் ?

உயர்ந்த மனிதர்கள் எப்போதோதான் தோன்றுகிருர் ள் ; ஆனுல் மறைவது மட்டும் சீக்கிரமாக மறைந்துவிடு ருர்கள்.

ஜீவா !

நான் புலம்புகிறேன்.

ஒரு 'ஜீவகாவியம் முடிந்துவிட்டதே என்று கலங்கு றேன்.

ஆனுல் இன்ருே நாளையோ என்ருே உன்னைச் சந்திப் பன்.

உனக்குப் பின்னுல் உலகத்தில் நிகழ்ந்த அனைத்தையும் னக்கு நான் சொல்வேன்.

அது நீ மகிழக்கூடிய செய்தியாகத்தான் இருக்கும்.

சந்திக்கிறேன், ஜீவா சந்திக்கிறேன்...

கண்ணதாசன்.

## சிறந்த பணியாளர் !

"தமிழுக்கு சிறந்த பணி செய்த எழுத்தாளர்களில் முக்கியமானவர் ஜீவானந்தம். அவருடைய மறைவு தமிழ் மொழி வளர்ச்சிக்கு பெரியதொரு நட்டமாகும். அவரது அகால மரணத்துக்கு வருந்துகிறேன்"

நாம் தமிழர் இயக்கத் தலைவர்
சி. பா. ஆதித்தனர்

ஜீவா !

அந்தப் பாட்டு எங்கே ஜீவா ?

அந்தப்பேச்சு எங்கே ஜீவா ?

மேடையிலே புலிபோல் அங்குமிங்கும் பாய்ந்து சுழ லுமே அந்த மேனி எங்கே ஜீவா ?

முதல் நாள் தானே நான் பார்த்தேன்.

ஒரு கூட்டத்தில் பேசிவிட்டு இன்னெருகூட்டத்திற்குப் போகும் வழியில் நீ என்னென்ன சொன்னுய் ?

" நான் அதிகம் உடம்பை அலட்டிக்கொண்டு பேசு கிறேன் : இப்படி முப்பது வருஷம் பேசி விட்டேன் ; இனி நீங்களெல்லாம் பேசவேண்டும் " என்ருயே ஏன் ?

நாளை வரை நாம் உயிரோடியிருக்க மாட்டோம் என்று அப்போதே உனக்குத் தெரிந்து விட்டதா ?

' சம்பத் உடல் நிலை தேறவேண்டும் ' என்று தலையங் கம் தீட்டி நாலுநாளாக வில்லையே; இந்த நேரத்தில் உத்தம மான தலைவர்களெல்லாம் உயிரோடிருக்க வேண்டும் என்றுதானே அதை எழுதினுய் ?

அந்த ஆசை உன்மீது எங்களுக்கில்லையா ஜீவா ?

ஜீவா !

நீ இறந்துவிட்டதாக எண்ணிக்கூடப் பார்க்கமுடிய வில்லையே என்ருல் !

இன்னும் இருப்பது போலத்தானே என் கண்களுக்குத் தெரிகிறது.

" 19-ம் தேதி தாம்பரம், கூட்டம் மறந்து விடாதீர்கள் " என்று ஞாபகப் படுத்திவிட்டு 18-ம் தேதி சொல்லாமல் போய் விட்டாயா ஜீவா !

தவழ்ந்து திரிந்துகொண்டிருந்த ஒரு குழந்தைகாணாமல் போய்விட்டதைப் போலவே எனக்குத் தோன்றுகிறதே ஏன் ?

ஒரு நாள் பழகினாலும் உயிரோடு அணைத்துக்கொண்டு விடும் ஆற்றலை நீ எவ்வாறு பெற்றாய் ?

உயர்ந்த மனிதர்கள் எப்போதோதான் தோன்றுகிறார்கள் ; ஆனால் மறைவது மட்டும் சீக்கிரமாக மறைந்துவிடுகிறார்கள்.

ஜீவா !

நான் புலம்புகிறேன்.

ஒரு 'ஜீவகாவியம் முடிந்துவிட்டதே என்று கலங்குகிறேன்.

ஆனால் இன்றோ நாளையோ என்றோ உன்னைச் சந்திப்பேன்.

உனக்குப் பின்னால் உலகத்தில் நிகழ்ந்த அனைத்தையும் உனக்கு நான் சொல்வேன்.

அது நீ மகிழக்கூடிய செய்தியாகத்தான் இருக்கும்.

சந்திக்கிறேன், ஜீவா சந்திக்கிறேன்...

கண்ணதாசன்.

## சிறந்த பணியாளர் !

"தமிழுக்கு சிறந்த பணி செய்த எழுத்தாளர்களில் முக்கியமானவர் ஜீவானந்தம். அவருடைய மறைவு தமிழ் மொழி வளர்ச்சிக்கு பெரியதொரு நட்டமாகும். அவரது அகால மரணத்துக்கு வருந்துகிறேன்"

நாம் தமிழர் இயக்கத் தலைவர்
சி. பா. ஆதித்தனார்

## மனித குலத்தை நேசித்தார் ஜீவா

தோழர் ப. ஜீவானந்தம் அவர்களின் மறைவு மிகவும் திடுக்குறத்தக்கதாகும். நல்ல நண்பர்கள் கிடைப்பது அரிதெனக் கருதக் கூடிய தமிழக அரசியல் வானிலே மிகவும் குறிப்பிடத் தக்கவர்களில் தோழர் ஜீவானந்தமும் ஒருவர். தாம் கொண்ட இலட்சியத்திற்காக எதையும் தியாகம் செய்யக்கூடிய ஓர் இலட்சியவாதி. அவர் அந்தரங்க சுத்தியுடன் மனித குலத்தை நேசித்தார். அரசியல் உலகில் தாம் ஒரு கட்சியைச் சார்ந்தவராக—ஒரு கட்சியின் தனிப்பெரும் சக்தியாக விளங்கினாலும்கூட, தனி மனிதர்களைப் பகைத்துக்கொள்ளாமல்—மாறுக மாற்றுக்கருத்தும் கொள்கையும் உடையவர்களிடம் பேரன்பு கொண்டு பழகிய அவரது பெருந்தகைமை பல அரசியல் வாதிகள் ஏற்றுப் போற்றத் தக்கது.

தோழர் ஜீவானந்தம் நல்ல இலக்கியச் சிந்தனையாளர். அவர் வள்ளுவத்திற்கும் மார்க்சீயத்திற்கும் பாலம் அமைத்தார். கம்பனுக்கும் மில்டனுக்கும் உறவு உண்டாக்கினார். புதுமைக்கவி பாரதியின் பொதுவுடைமைக் கருத்துக்களைப் பொன்னே போலப் போற்றிப் புகழ்ந்தார். தோழர் ஜீவானந்தம் அவர்களின் இலக்கியத் தொண்டு—இலக்கிய முயற்சி தமிழ் இலக்கியத்திற்கும் தமிழ் நாட்டு பொதுவுடைமைக் கட்சியை சார்ந்த பலருக்கும் ஒரு நல்ல உறவை உண்டாகியது என்றால் மிகையாகாது. அவரது எழுத்தும் பேச்சும் புத்துணர்ச்சியையும் புதிய வேகத்தையும் உருவாக்கப் பயன்பட்டன.

தோழர் ஜீவானந்தம் நல்ல எழுத்தாளர்—பேச்சாளர் அரசியல் வாதி—பத்திரிகையாளர். இவற்றிற்கெல்லாம் மேலாக அவர் ஒரு சிறந்த கவிஞர். அந்த நாளில் பாடல்கள் மூலமாகப் பொதுவுடைமைக் கருத்தைப் பிரசாரம் செய்த

தலையாய கவிஞர். அவர் தமது பாடல்களைப்பாடும்போது கல்லும் கூடச்சற்றுத் துள்ளி எழும். அவரது கவிதைகளின் தொகுப்பு " ஜீவாவின் கவிதைகள் " என்ற பெயரில் அண்மையில் நூலாக வெளிவந்திருக்கிறது. தோழர் ஜீவானந்தம் மறைந்து விட்டார். அவரை "ஜீவா ஜீவா" என்று அன்போடும் பண்போடும் அழைத்து வந்தவர்கள் அன்பிற்கும் பண்பிற்கும் உரிய அந்த " பேராளனை " இழந்தனர். தமிழகக் கம்யூனிஸ்டு கட்சி தக்க முறையில் வழிநடத்திச் செல்லும் தகைசால் தலைவனை இழந்தது. தமிழ் இலக்கிய உலகம் சிறந்த சிந்தனையாளனை இழந்தது. தமிழகத்தின் மேடைகள் நல்ல ஒரு பேச்சாளனை இழந்தன. அவரோடு நட்புறவு கொண்டிருந்த நண்பர்கள் பழகுதற்கெளிய ஒரு இனிய நண்பனை இழந்தனர். தோழர் ஜீவானந்தம் அவர்களின் துணைவியார் புகழாளனாகத் திகழ்ந்த தன் துணைவனை இழந்தார். தோழர் ஜீவாவின் குழந்தைகள் புகழ்படைத்த தந்தையை இழந்தனர். தமிழக அரசியல் உலகம் பண்பட்ட ஒரு அரசியல் மேதையையே இழந்தது. இந்த இழப்பை ஈடு செய்ய இயற்கையாலும் முடியாது, முடியாது!

**தவத்திரு குன்றக்குடி அடிகளார்.**

## இலட்சிய வடிவம் ஜீவா

என் அருமருந்தன்ன நண்பர் ஜீவானந்தம் அவர்கள் காலமான செய்தி கேட்டு அப்படியே திடுக்கிட்டுப் போனேன். செய்தி கொண்டுவந்த நண்பரிடம் என்னால் ஒன்றுமே பேசமுடியவில்லை. அவரும், நானும் சில நாட்களாகச் சந்திக்க முடியவில்லையாயினும் அவருடைய உடல் நலனைப் பற்றி நான் அடிக்கடி விசாரித்துக் கொண்டிருந்தேன். அவரும் என் உடல் நிலையைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார். விரைவில் இருவரும் சந்திப்போம் என்று

வெகுவாக நம்பிக் கொண்டிருந்தேன், ஆனால் ஆண்டவன் திருவுள்ளம் வேறு விதமாக இருந்தது.

இரண்டு மூன்று ஆண்டுகளாக அவரைநான் சந்திக்கும் போதெல்லாம், மேடைப் பேச்சை சிறிது குறைத்துக்கொள்ளுங்கள் என்றும், உடலை பேணிக் காப்பாற்றி வாருங்கள் என்றும், சுவரை வைத்துக்கொண்டுதான் சித்திரம் எழுத வேண்டுமென்றும் பலவாருக அவருக்கு எடுத்துச் சொல்வேன். அனேக சந்தர்ப்பங்களில் மன்ருடிக் கேட்டுக் கொண்டதுமுண்டு. ஆனால் அவர் இலட்சியவாதி, சமுதாய நலனையே குறிக்கோளாகக் கொண்டவர். அதற்காக எதையும் தியாகம் செய்யத் தம்மைத் தயார் படுத்திக் கொண்டிருந்தவர். இதனால் உடல் நலனுக்கு முக்கியத் துவம் கொடாமலிருந்து விட்டார்.

அது தமிழுலகத்திற்குப் பெருநஷ்டமாகி விட்டது.

அவர் கம்பனிலே தோய்ந்தவர்; வள்ளுவத்திலே வாழ்ந் தவர்; பாரதியத்திலே லயித்திருந்தவர். கருத்தாழமிக்க அவருடைய சொற்பொழிவுகளை இனித் தமிழ்ச் செவிகள் கேட்கும் வாய்ப்பைப் பெற முடியாது. ஆனால் அவருடைய பெயர், அந்தச் செவிகளில் என்றும் ஒலித்துக் கொண்டிருக்கும். அவருடைய இடையருத் தொண்டு தமிழர்கள் நினைவில் என்றும் இருந்து கொண்டிருக்கும்.

—பேரறிஞர். வெ. சாமிநாதசர்மா.

## என் தலைமுறையில் காணமுடியாது !

அமரர் ஜீவா அவர்கள் இந்த நாட்டு மக்களை வழிபடு தெய்வமாகக் கொண்டு பாடுபட்ட வீரர். அவர் இந்த நாட்டு மக்களின் சமுதாய வாழ்வில், அரசியல் வாழ்வில் திளைத்து நின்றவர். அத்தகைய பெரு வாழ்வு பெற்ற

அமரர் ஜீவாவைப் போன்ற ஆசானை என் தலைமுறையில் காணமுடியாது.

சோவியத் யூனியனில் 120 வயது வரை உழைக்கிறார்கள். அந்த அளவிற்கு அறிவியல், விஞ்ஞானம் முன்னேறியிருக்கிறது. அதுபோன்று இங்கும் அறிவியல் வளராதா. ஜீவா 120 ஆண்டுகள் வாழ்ந்து தமிழகத்திற்கும், தமிழுக்கும் தொண்டு செய்யமாட்டாரா என்று ஏங்கினேன். அவர் உரமான உடம்பு பெற்றவர்; உரமான நெஞ்சு பெற்றவர்; தெளிவான அறிவு பெற்றவர். அவரது இலக்கியப் பேச்சுக்களில் அவரது வலிமை தெரியும். அத்துடன் அவர் நேர்மை, பண்பாட்டையும் இணைத்துக் கொண்டார். இப்படிப்பட்ட பெருவாழ்வு பெற்றவரை என் தலைமுறையில் காண முடியாது. அண்மையில் அவர் பாரதி விழாவில் பேசினார். சீன ஆக்ரமிப்பு நிகழ்ந்துள்ள நிலையில் அவர் எப்படிப் பேசப் போகிறாரோ என்று எண்ணினோம். ஆனால் அவரது பேச்சுத்தான் உயர்ந்த இலக்கியப் பேச்சாக அமைந்திருந்தது. அத்தகைய உயர்ந்த பேச்சுக்களை, எடுத்துக்கொண்ட பொருளில் நின்று பேசும் நல்ல இலக்கிய உரைகளை இனி கேட்க முடியாது. பண்பாட்டுக்கும், நேர்மைக்கும் எடுத்துக்காட்டாக விளங்கிய தமிழ்ப் பெரியாருக்கு தமிழாசிரியர் சார்பாக இறுதி அஞ்சலி செலுத்துகிறேன்.

**பேராசிரியர் டாக்டர். மு. வரதராசனார்.**

## சம உரிமையின் மூச்சு!

ஜனசக்தி ஆசிரியர் ஜீவானந்தம் உடலை உதறிச்சென்றார். ஆனால் அவர் குரல் இன்னும் நமது செவியில் ஒலிக்கிறது. அவர் சென்றதும் தமிழ்மேடை விரிச்சென்றிருக்கிறது. தமிழ் மேடைக்கு அவர் ஜீவாதாரமாக விளங்கினார். ஜீவானந்தம் பேச்சில் இலக்கியம் உண்டு. கலையுண்டு. கலை

உண்டு, உணர்ச்சிப் புயலுண்டு, வீர எழுச்சியுண்டு. அவர் பேச்சு, சமவுரிமையின் மூச்சு. நான் ரஷ்யாவில் இருந்த போது ஜீவானந்தத்தின் புகழ் அங்கே எட்டி யிருந்தது.

" எல்லோரும் எல்லார்க்கும்
இன்புற வாழ்வோம்
அன்புற வாழ்வோம்
நல்லதோர் தொழிலாற்றி
நண்பராய் வாழ்வோம்
பண்புற வாழ்வோம்

இதுவே அவரது குரலின் குறிக்கோள்! சமவுரிமை ஜீவானந்தத்தின் ஆவி ஆயிரம் ஆயிரம் பேச்சாளர் உள்ளத்தில் பெருக்கெடுத் தோங்குக.

**யோகி சுத்தானந்த பாரதி**

## துருவ நட்சத்திரம்

ஜீவாவின் அரசியல் வாழ்வை நினைத்தால் அவரோடு நான் நெருங்கவே முடியாது. ஆனால் அவருடைய தமிழை நினைத்தால் தானாகவே என் நெஞ்சம் அவரோடு உறவாடுகிறது. சமீப காலத்திலே அவருடையே தமிழ் பேச்சிலே இருந்த ஆழம் என்னைப் பெரிதும் கவர்ந்தது.

உண்மையாகச் சொல்லப் போனால் இந்தக் காலத்தில் உள்ள தமிழ் அறிஞர்களைப்போல அல்ல அவர். நுனிப்புல் மேயவோ, ஆரவாரத்தோடு நாலு கைதட்டுகளை வாங்கவோ மேடை ஏறுதவர் ஜீவானந்தம்.

அவருடைய பிரிவால் தமிழ்த்தாய் அருமையான தமிழ்க் குழந்தையை — துருவ நட்சத்திரத்தை இழந்து விட்டாள்.

காரைக்குடி கம்பன் விழா மேடையை அலங்கரித்த விளக்குகளில் ஒளி நிறைந்த மின்னும் விளக்கு அணைந்து விட்டது.

அண்மை காலத்தில் அவர் பாரதியைப்பற்றி ஆற்றியிருக்கக்கூடிய சொற்பொழிவுகள், செய்திருக்கக்கூடிய ஆய்வுகள் தனிச் சிறப்பு வாய்ந்தது. இத்தகைய ஒருவரின் மறைவு தமிழகத்தில் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். அவருடைய நல்ல நினைவைப் போற்றி வளர்க்க நிலையான ஒன்றைச் செய்ய வேண்டும்; அதிலே நானும் பங்குபெற வேண்டும்.

**தமிழறிஞர் கி. வா. ஜகந்நாதன்**

## சிறந்த மேதை ஜீவா

நானும் ஜீவாவும் சிறு வயது முதல் பழகினோம். படித்தோம். காங்கிரசில் சேர்ந்தோம்! பிறகு அவர் கம்யூனிஸ்ட் கட்சிக்குச் சென்றார்; நான் அரசியலில் இருந்தே விலகினேன். தமிழில் மிக பாண்டித்யம் வாய்ந்தவர். கம்பனில் மிக ஈடுபாடு கொண்டவர். அவர் தமிழ் இலக்கியத்தில் சிறந்த மேதை ; ஏன் தமிழ் வெறியர் என்று சொன்னாலும் வியப்பதற்கு இல்லை.

காரைக்குடி கம்பன் விழாவில் ஜீவா பேசினால் அதைக் கேட்க ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுவார்களே ! இனி அந்தக் குரலை எங்கே எப்படி எப்போது கேட்போம்! ஜீவா மறைவு தமிழுக்கு தமிழகத்துக்கு மாபெரும் நஷ்டம்.

**தமிழறிஞர் ராய. சொக்கலிங்கம்**

## நட்சத்திரம் மறைந்தது !

அன்பர் ஜீவானந்தத்தின் பிரிவை அறிந்து பெரும் துயரம் அடைந்தேன். மின்னாமல் இடி விழுந்தது. தமிழ்த்

தாய் ஒரு வீர மைந்தனை இழந்துவிட்டாள். ஒரே ஜீவானந்தம் இருந்தார். அவரைக் காலன் கவர்ந்து கொண்டான் - அவரது மனைவி மக்களுக்கு எனது துயரத்தைத் தெரிவியுங்கள். நாம் அவர்களுக்கு என்ன ஆறுதல் கூறமுடியும்?

பரலி சு. நெல்லையப்பர்.

## வையகத்துக்கே நட்டம்

நான் எந்த அரசியல் கட்சியிலும் சேராதவன். இருப்பினும் ஜீவாவின் மறைவுச் செய்தி என்னை பேரதிர்ச்சிக்குள்ளாக்கியது. வாழவேண்டியவர். திரு. சிவாஜி கணேசன் நடத்திய எட்டயபுரம் பாரதி விழாவின்போது அவர் பேச்சைக் கேட்ட நான் அதிர்ந்தே போனேன். இப்படியும் ஒருவர் உணர்ச்சி வெள்ளமாக இருந்து பேச முடியுமா என்று?

சென்னையில் நடைபெற்ற பாரதி விழாவிலும் பேச்சைக் கேட்டேன். வள்ளுவன் கூறிய பேராண்மைக்கு இலக்கணமாகத் திகழ்ந்த உணர்ச்சிக் குன்று; உயர்ந்த மாமனிதர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழாது மறைந்தது வையகத்துக்கே நட்டம்.

பேராசிரியர். ஐயன்பெருமாள்கோனுர்

## அமரர் ஜீவா

ஆம்! நம் எல்லோருக்கும் இனிமேல் ஜீவா அவர்கள் அமரர். சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரையில் அன்போடு அழைக்கும் ஜீவா அந்தோ! இனி நாம் பார்க்கவே முடியாத அமரராகி விட்டார். தன்னலமற்ற தியாகி

ஜீவா அவர்கள். அஞ்சாநெஞ்சம் படைத்தவர். கொள்கையில் முன் நிற்கும் வீரர் ஜீவா.

சமதர்ம பொதுஉடமை கட்சியின் கொள்கைகளை நம் தமிழ் நாட்டில் முதல் முதல் பரவச் செய்வதற்குப் பல எதிர்ப்புகளிலும், பெருங் கஷ்டங்களிலும் சோராது முன்னின்று வளர்த்த பெருமைக்குரியவர் ஜீவா. நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் சமூக சீர்திருத்த பொது உடமை கொள்கை மக்களிடம் இன்று பரவி இருப்பதற்கு கடமை வீரர் ஜீவா அவர்களின் விடாமுயற்சியே ஆகும்.

உறுதியும் உண்மையும் சிறப்புமிக்க பேசுந்திறமையின்பேறு பெற்றிருந்தது போலவே ஜீவா அவர்கள் எழுதும் திறமையிலும் ஆற்றல் பெற்றிருந்தார். மிகச் சிறந்த முற்போக்கு எழுத்தாளர் ஜீவா. அவர் எழுத்தில் புலமை மிளிரும்; புதுப்புதுக் கருத்துக்கள் துள்ளும். எழுத்தோவியங்கள் ஒளிவீசும். சக்திவாய்ந்த பேசும் திறத்தினால் தமிழ்நாட்டில் படித்த மக்கள் முதல் பாமர மக்கள் வரையில் அவர் கொள்கையைப் பின்பற்றவும், பாராட்டவும் செய்த உண்மை செயலாளர். கருத்தாழம் மிகுந்த சொற்பொழிவு ஜோதி நமது ஜீவா.

இலட்சிய வீரர் விட்டுச் சென்ற மக்கள் பணியை— தமிழ் இலக்கியப் பணியை நிறைவேற்றுவதில் ஆறுதல் அடைவோம்.

திருமதி சாமி சிதம்பரனார்

## அணையா விளக்கு

தொழிலாளர் தம் உள்ளம் கவர்ந்த தலைவரும் தொண்டுச் செல்வருமாகிய உயர்திரு. ப. ஜீவானந்தம் அவர்கள் பிரிவு செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன். மின்னுமல்

இடித்த பேரிடி போன்ற இப்பேரவலச் செய்தி என்னை ஆற்றொணுத் துயரத்தில் ஆழ்த்திவிட்டது.

பேரன்பர் ஜீவானந்தம் அவர்கள் பிரிவால் தமிழ்நாடு மாபெரும் தலைவரை இழந்துவிட்டது. அவர் தம் சொல்லாற்றலையும் எழுத்தாற்றலையும் எண்ணியெண்ணி அலமருகின்றேன். பல மேடைகளில் நானும் திரு. ஜீவானந்தம் அவர்களும் ஒருங்கமர்ந்து சொற்பொழிவாற்றியுள்ளோம்; நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்ருகத் தோன்றி என் துன்பத்தினை மிகுவிக்கின்றன. தொழிலாளர் தலைவர்களுக்கும் துறைபோய தமிழறிவு உண்டு என்பதை மெய்ப்பித்துக் காட்டிய தலைவர் ஜீவானந்தம்; அவர்கள் ஆற்றியுள்ள தமிழ் இலக்கியப் பணிகள் என்றும் நிலைத்து நிற்பனவாகும்.

நாட்டு விடுதலைக்காகவும், சுயமரியாதைக் கொள்கைகளைப் பரப்புவதற்காகவும், தொழிலாளர் தம் நல்வாழ்விற்காகவும், தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவும் ஜீவானந்தம் அவர்கள் அளப்பரும் தொண்டு புரிந்துள்ளார்கள். பல்துறை வல்லுநராக விளங்கிய ஜீவா, காட்சிக்கு எளியர், கருத்துக்கு இனியர் என்பதை உணர்ந்து மகிழ்ந்திருந்தேன். அந்தோ! இலக்கியப் பேரரசனை, இலட்சிய வீரராக விளங்கிய ஜீவாவின் பிரிவை என் மனமும் ஏற்க மறுக்கின்றதே!

தொழிலாளர்களின் நீர்மல்கிய கண்களை இரத்தம் கசியும் இதயங்களை என் சொல்லின் விளக்கமுடியும்? அவர்கள் இதயக் கோயில்களில் ஜீவா அணையா விளக்காக ஒளி வீசித் திகழ்வார்.

—பேராசிரியர், மயிலை. சிவமுத்து

## தமிழுக்கு சிறந்த சீடர் !

"கடந்த 30 ஆண்டுகளாக ஜீவானந்தத்துக்கும் எனக்கும் தொடர்பு உண்டு: நாங்கள் ஒருவரையொருவர் நன்கறிவோம். தமிழை அவர் எவ்வளவு அருமையாக நேசித்தார் என்பதையும், தமிழுக்கு எத்தகைய சிறந்த சீடர் என்பதையும் நான் அறிவேன்.

மாதர் நல இலாகாவில் பணிபுரியும் ஜீவாவின் துணைவியார் பத்மாவதியும் என்னுடைய மகளும் அவ்விலாகாவில் அதிகாரிகளாக இருக்கிறார்கள். அம்முறையிலும் ஜீவாவின் குடும்பத்தினருடன் எனக்குத் தொடர்பு உண்டு.

எனது ஆழ்ந்த அனுதாபத்தையும் துயரத்தையும் ஜீவாவின் குடும்பத்தினருக்கும், தாமரை, ஜனசக்தி ஊழியர்களுக்கும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

—பெ. ந. அப்புசாமி

## தமிழகத்தின் தவப்புதல்வர் ஜீவா

நாற்பதாண்டுகளுக்கு மேலாக நானிலத்தோரின் கண்ணீரைத் துடைத்துவந்த கர்மவீரனது இதயம் நின்றுவிட்டது. பாழ்பட்ட பாரதத்தையும், தாழ்வுற்ற தமிழையும் வாழ்விக்க உழைத்த, உயிர் ஆற்றலின் உவகை உருக்கிய ஒளிப்பிழம்பாக அமைந்துவிட்டது. கண்ணழியக் கலுழ்கிறது. நன்றி மறவா நல்லவர் கூட்டம்.

ஈடுசெய்யமுடியாத இழப்பை நினைத்து - எரிந்த உடலை எண்ணி, ஏவல் புரியும் தமிழின் வளம் எல்லாம் புலப்படுத்திய நாவன்மையை நாடி குரல் வளத்தை தேடி, பண்டிபோத்தையும் சிங்க ஏருக்கும், எழுத்தின் வலிமைக்கு ஏங்கி - யாவற்றுக்கும் மேலாக விஷப்பரீட்சைகள் நிறைந்த வாழ்

விலே, விளக்கம் பெற்ற வீரத்தையும் ஈரத்தையும் விரும்பி வேண்டி கையறு நிலையில் கதறுகிறது தமிழகம்.

தமிழகத்தின் கம்யூனிஸ்ட் இயக்க பீமனுகச் சிறந்த நமது ஜீவா மறைந்து விட்டார்.

ஒப்புயர்வில்லாத நாவலர், பேறு மன்னர், தர்க்க வேந்தர் நம்மை பிரிந்துவிட்டார்.

கொள்கைப் பிடிப்புக்கும், வைராக்கியத்துக்கும் உரைகல்லாகத் திகழ்ந்த வீரர், ஊழிக்காற்றனைய அடக்குமுறைக்கும் அஞ்சாநெஞ்சத்துடன் ஈடுகொடுத்த கோமான் இயற்கை எய்திவிட்டார்.

தமிழகத்தின் முற்போக்கான இயக்கங்களுக்கெல்லாம் ஊக்கமளித்த தலைவர் மண்ணுலக வாழ்வை நீத்துவிட்டார்.

நாட்டின் சுதந்தரத்தைக் காக்கவும், நல்லெண்ணம் படைத்தசக்திகள் அனைத்தையும்ஒன்றுபடுத்திச் சமாதானத்தைப் பேணவும், தேசிய ஐக்கிய முன்னணியை உருவாக்கிச் சோஷலிஸத்தை நோக்கி முன்னேறவும், பகல் இரவு பாராது பாடுபட்ட உத்தமரை இழந்து தவிக்கிறோம் நாம்.

தமிழில் இலக்கியம் அவரால் பல புது கொடைகளைப் பெறுமென்று எதிர்பார்த்தோம். காலன் நம்மை வஞ்சித்து விட்டான்.

ஆனுல்! ......

காலனுல் நம்மைக் கெடுத்துவிட முடியாது. ஜீவாவின் ஜீவஒளி நமக்கு கலங்கரை விளக்கமாக நின்று நமக்கு வழிகாட்டும். அவர் விட்டுச் சென்ற பணியை, சோஷலிஸ்டு பாரதத்தின் பெருமையாக வலிவும் பொலிவும் பெறும் சோஷலிஸத் தமிழகத்தைப் படைக்கும் திருப்

பணியை, நிறைவுபெறச் செய்வதற்கு ஆவன செய்வோ மெனநாம் உறுதி எடுப்போம். அதுவே ஜீவாவின், நினைவைப் போற்றும் சிறப்பான வழியாகும்.

எஸ். ராமகிருஷ்ணன்

## எங்கு நோக்கினும் ஜீவா

நம்ம ஜீவானந்தம் இயற்கை எய்திவிட்டார் என்ற கொடிய செய்தியை நண்பரொருவர் வாயிலாகக் கேட்டதும் என் மூச்சே நின்றுவிட்டது போலாயிற்று. இதை என்னால் நம்பவே முடியவில்லை. இரண்டு நாட்களுக்கு முன்புகூட பார்த்துப் பேசினேனே! ஐயோ! என்ன கொடுமை! ஜீவா வின் பிரிவை நம்மாலேயே தாங்கமுடியவில்லையே! சகோதரி பத்மாவதி எப்படித் தாங்கிக்கொள்வார்? பிள்ளைகள் எப்படித் தாங்கும்? தோழர்கள் எப்படித் தாங்குவர்? தமிழகம்தான் எப்படித் தாங்கிக்கொள்ளும்? கரிய நெடிய தோற்றம்; கற்றை மீசை; சதா புன்னகை தவழும் வதனம்; அறிவுச் சுடர் ஒளிரும் கண்கள்; சிம்மக் குரல்; தொண்டின் நிலைக்களனுயுள்ள தியாகத் திருமேனி ஆகிய இவற்றை நாம் எளிதில் மறக்க முடியுமா?

எங்கு பார்த்தாலும் ஜீவா காட்சியளித்துக்கொண்டிருந் தார். தேச சேவை, கட்சி அரசியல், இலக்கியப் பணி, தொழிலாளர் தொண்டு, உழவர்களுக்கு உதவி, நெசவா ளர்களிடம் நேசம், பத்திரிகை பெரும் பணி, சமுதாயச் சீர்திருத்த இயக்கம் முதலிய அனைத்திலும் ஜீவா ஈடுபட்டு 35 ஆண்டுகளுக்கு மேலாகத் தன்னலமற்ற தொண்டு புரிந்துவந்தார். அவர் ஈடுபடாத இயக்கமே இல்லை. அந்த ஒப்பற்ற ஜீவன் ஜீவவொளியில் இணைந்துவிட்டது...?

என்னத்தைச் சொல்ல? பருவுடலை நீத்துச் சென்ற ஜீவா நுண்ணுடலிலிருந்து நமக்கு ஜீவன் அளித்துக்கொண் டிருக்கட்டும்.

நாரண துரைக்கண்ணன்.

## ஆஸ்திகரும் விரும்பும் ஓர் நாஸ்திகர்!

"தமிழ்நாடு கலை இலக்கியப் பெரு மன்றத்தின் தலைவரும் பிரபல கம்யூனிஸ்ட் தலைவருமான திரு. ப. ஜீவானந்தத்தின் எதிர்பாராத மறைவு கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கு மட்டுமல்லாமல் தமிழகத்தின் கலை இலக்கிய உலகத்துக்கும், இலக்கிய ரசிகர்களுக்கும் பெருத்த அதிர்ச்சிதரும் செய்தியாகும். திரு. ஜீவா சிறந்த பேச்சாளர். தமிழகத்தின் தலைசிறந்த பேச்சாளர் என்று விரல்விட்டு எண்ணினால் முதல் வரிசையிலே அவர் இடம் பெறுவார். அவரது இலக்கியப் பிரசங்கங்களை அவரது எதிரிகள்கூடக் கேட்டு ரசிக்க விரும்புவார்கள். நாத்திகரான ஜீவாவின் பிரசங்கத்தைக் கேட்க ஆஸ்திகர்கள்கூட ஓடோடி வருவார்கள். தமிழ் இலக்கியப் பரம்பரையின் பிடிப்பும் புதுமை இலக்கியப் பார்வையும் கொண்ட ஜீவாவின் எழுத்துக்கள், பேச்சுக்கள் எல்லாம் தமிழகத்தில் முற்போக்கு எண்ணம் கொண்ட பல ரசிகர்களையும், இலக்கிய அன்பர்களையும், எழுத்தாளர்களையும் உருவாக்கியுள்ளது. என்றால் அது மிகையல்ல. அவரது மரணம் கலை இலக்கிய உலகுக்கு ஈடு செய்ய முடியாத ஒரு பெரு நஷ்டமாகும்.

— தொ. மு. சி. ரகுநாதன்

## சாதலும் கற்கண்டு!

நேற்று வரை ஜீவா ஒருவர். இன்று லட்சோபலட்சம் ஜீவாக்கள் இருக்கின்றனர். அவர் எடுத்த பணியைத் தொடுத்து முடிக்கத் துடிக்கின்றன ஒவ்வொரு கம்யூனிஸ்டும் ஒரு ஜீவாவாக நிற்கின்றான். மரணத்தைக் கண்டு அஞ்சுபவர்களல்ல கம்யூனிஸ்டுகள். ம ர ண த் தா லு ம் கொல்லப்படாத பெருமை கம்யூனிஸ்டுகளுக்குத்தான்

உண்டு. லட்சியத்திற்காக செத்தால் எங்கள் வாழ்க்கை அழ காக முடிகிறதென்று பொருள். அப்படித்தான் ஜீவா மறைந்தார்.

சோஷலிஷ லட்சியத்திற்காக எந்த நோன்பும் ஏற் போம். தூக்குமேடையையும் துச்சமென எண்ணுவோம். கொண்ட கொள்கைக்காக சாதலும் கற்கண்டு என்று எங்களுக்கு கற்றுக்கொடுத்தவர் ஜீவா.

இந்தியாவிற்கு ஏற்பட்ட சகலதொல்லைகளிலும் கம்யூனிஸ்டுகள் ரத்தம் சிந்தினர். ஜீவாவின் உடம்பெல் லாம் தியாகத் தழும்புகள். ஜாதி எதிர்ப்பிற்காக பெற்ற ஒரு வெட்டு. தொழிலாளர்கள் துயர் துடைப்பதற்காக ஒரு வெட்டு. இப்படி எத்தனையோ முறை ஜீவா ரத்தம் சிந்தினார். ஆம் எங்கள் எதிரியே ஒப்புக்கொள்கிறபடி, ஜீவாவின் செயலால் சரிந்த சூதுக்கோட்டைகள் பலப்பல.

அமரர் ஜீவா காட்டிய அந்த ஜீவ ஒளியை கையி லேந்தி அவர் சென்ற லட்சியப் பாதையிலே வீரநடை போடுவோம். வெற்றி பெறுவோம். என சபத்மேற்போ மாக!

—ஜெயகாந்தன்

## மனிதப் பண்பு வேண்டாமா ?

மறைந்த மாவீரரும் பொதுவுடைமைக் கட்சித் தானைத் தலைவர்களில் ஒருவரும் — சுயமரியாதை இயக்கத்தின் ஆரம்ப காலத்தில் வீர நடைபோட்டு, அதை வளர்த்தவரு மான தோழர் ப. ஜீவானந்தத்தின் மறைவு தமிழகத்து மக்கட்கே பேரிழப்பாகும்.

முதல் நாள் வரையில் கடுமையாக மோதிக்கொண்ட மாற்றுக் கட்சிகள்கூட, அவற்றின் வார இதழ்களும், நாளிதழ்களும்கூட ஜீவானந்தம் மறைந்த சேதி கேட்டு

முதல் பக்கத்தில், கருப்பு விளிம்பு கட்டி மாவீரன் ஜீவா மறைவு என்று கண்ணீர் சொரிய செய்தி வெளியிட்டன.

ஆனால், உயர்தர ஏடுகள்—என்று தங்களைக் கூறிக் கொள்ளும் ஏடுகள் சில ஒருஅங்குலத்தில் — ஒன்றரை அங்குலத்தில் செய்தி வெளியிட்டன. சில ஏடுகள், ஜீவானந்தம் மறைந்ததைக்கூட வெளியிடாது; அவரது உடல் தகனம்பற்றிச் செய்தி வெளியிட்டன.

30 ஆண்டுகள் பொது வாழ்வில் ஈடுபட்டவருக்கு—பொது வாழ்விலும் **மேனி மினுக்கியாக அல்ல—சிறைச்சாலை என்றால் சிரித்துக்கொண்டு சென்றவருக்கு** — தொழிலாளர் துயர் நீக்க, கஷ்டநஷ்டங்களை புன்னகையுடன் ஏற்றவருக்கு—பெண்டு, பிள்ளை, உற்றார் உறவினரை மறந்து பொது வாழ்வில் ஈடுபட்டவருக்கு தக்க விதத்திலே மரியாதை செலுத்தும் பண்பு பெற வேண்டாமா அந்த ஏடுகள் ?

அரசியல் மனமாச்சரியம்—கருத்து வேறுபாடு இருக்கலாம். ஆனால் 30 ஆண்டு பொதுத் தொண்டில் **பத்து ஆண்டு சிறை வாழ்வு** ஏற்றவருக்கு இதைக்கூடச் செய்யக் கூடாதா ?

**சட்டசபை எதிர்கட்சி உபதலைவர், மு. கருணாநிதி.**

## ஒளிவீசும் மணிமகுடம் !

தோழர், தொண்டர், தூயர், தலைவர் ஜீவானந்தத்தின் வாழ்க்கை ஒரு இடையறாத போரிட்ட இலக்கியம்.

கண்ணீரையும், வியர்வையும், இரத்தத்தையும்வைத்து கட்டிய ஒரு சிங்கார மாளிகை ; அது ஒரு வீரமாகாவியம்.

தமிழ் நாட்டு முற்போக்கு சக்திகளின் வீரவரலாற்றை ஏட்டு முகப்பிலே ஒளி வீசும் மணி மகுடமாக அது என்றும் விளங்கும். வாழ்க ஜீவானந்தம். வந்தேமாதரம்.

ஆசிரியர் “ **பாரதம்** ” **தூக்குமேடை பி. எஸ். ராஜகோபாலன்.**

## அன்பின் உறைவிடம்

ஜனவரி மாதம் 18-ம் தேதி கம்யூனிஸ்ட் கட்சித்தலைவர்களில் ஒருவராகிய ப. ஜீவானந்தம் பூத உடம்பை நீத்த செய்தி அன்பர்களை துயரக் கடலில் ஆழ்த்தியது. அவர் 58-ம் வயதில் வாழ்க்கையை முடித்துக் கொண்டார்.

ஒரு கட்சித்தலைவராக இருந்தாலும் அவர் தமிழர் அனைவருடைய அன்புக்கும் உறைவிடமாக விளங்கினார், தமிழ் நூல்களில் ஆழ்ந்த பயிற்சியும் எதையும் அழகாகவும், ஆற்றலுடனும் விளக்கும் பாங்கும் படைத்தவர் அவர். பாரதியாரைப்பற்றி அவர் பேசியதைக் கேட்டவர்கள் தம் வாழ்நாள் முழுதும் அந்தப் பேச்சை மறக்கமாட்டார்கள். அவ்வளவு அற்புதமாகப் பேசுவார். திருவருட்பாவை ஒரு புதுக் கோணத்தில் வைத்து ஆராய்ந்து பேசுவார். காரைக்குடி கம்பன் திருநாளில் ஆண்டுதோறும் அவருடைய சொற்பொழிவுக் கர்ஜனை இருக்கும்.

இனி எங்கே அதைக் கேட்கப்போகிறோம். அவர் குடும்பத்தினருக்கு எம் அநுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

கலைமகள்.

## தேசபக்தர் ஜீவானந்தர்

ஜீவானந்தர் வைரம் ஏறிய பழைய வீரர். திரு. ஜீவானந்தர் மரணமுற்றதை அறிந்து வருந்துகின்றோம்.

திரு. ஜீவானந்தர் சுத்தமான உள்ளம் படைத்த தேசபக்தர். அவர் அரசியல்வாதி மட்டுமல்ல. தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த தேர்ச்சி பெற்றவர் அவர். உணர்ச்சி ததும்பும் தமிழ் நடையில் பேசியும் எழுதியும் வந்தார்,

எனவே, அவர் மறைந்தது தமிழ் இலக்கியத்துக்கு நஷ்டமாகும். திரு. ஜீவானந்தரின் குடும்பத்தினருக்கு நண்பர்களுக்கும், தோழர்களுக்கும் நமது அனுதாபங்கள்

கல்கி ' 27—1—63

## நல்ல பண்பாளர் !

தமிழகத்து கம்யூனிஸ்டு கட்சித் தலைவர் ஜீவானந்தம் மறைந்துவிட்டார் என்ற செய்தி எங்களை எல்லாம் கலங்க வைத்துவிட்டது.

ஜீவானந்தம் நமது சுயமரியாதை இயக்கப் பாசறையில் பணிபுரிந்தவர். சுயமரியாதைக் கருத்துக்களை பரப்பி மூட நம்பிக்கைகளை முறியடித்தவர்.

ஜீவா எப்போதுமே கருத்து வேற்றுமைகளை மறந்து பண்போடு பழகுபவர் ; நற்குணம் படைத்தவர் ; அண்ணா மீது தனிப்பற்றும், பாசமும் கொண்டவர். அவரது இழப்பு கம்யூனிஸ்ட் கட்சிக்கு மட்டுமில்லை, தமிழகத்திற்கே பெரு நஷ்டமாகும்.

நல்லதொரு அரசியல் வாதியை இழந்து நல்லதொரு பண்பாளரை இழந்து, தவிக்கும் தமிழகத்து மக்களுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் எங்கள் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பி. எஸ். இளங்கோ

மாலைமணி 27—1—63

## நெஞ்சு மறந்திடாதே !

காலுக்குச் செருப்பு மில்லை
கால்வயிற்றுக் கூழுமில்லை
பாழுக்குழைத்தோ மடா—என் தோழனே
பசையற்றுப் போனோ மடா

குண்டிக்கொரு துண்டுமிலைக்
கொல்வறுமை தாளவில்லை
ஒண்டக் குடிசை யில்லை—என் தோழனே
உழைத்திளைத்துப் போனோமடா
நோய் நொடிகள் வெம்புலி போல்
நூறுவிதம் சீறுவதால்
தாய்தந்தையர் பெண்டுபிள்ளை—என் தோழனே
சாய்ந்துவிழக் கண்டோமடா
பாலின்றி பிள்ளை அழும்
பட்டினியால் தாயழுவாள்
வேலையின்றி நாமழுவோம்—என் தோழனே
வீடுமுச் சூடும் அழும்.

தோழர் ஜீவானந்தம் நம்மனைவரையும் விட்டுப்பிரிந்து விட்டார். எதிர்பாராத நேரத்தில் இந்தத் துன்பச் செய்தி தமிழகத்துக்குக் கிடைத்திருக்கிறது.

நண்பர் ஜீவா மறைந்துவிட்டார் என்ற அவலச் செய்தி நமக்கு அறிவிக்கப் பட்ட நேரத்தில், இது பகையினால் இட்டுக்கட்டிக் கூறப்படுகின்ற நச்சுச்செய்தியோ என நாம் ஐயுற்றோம்—நம்ப மறுத்தோம். உண்மைதான்—உறுதி தான் என உணர்ந்ததும் நம் இதயத்தைக் கொடுந்துயரம் துளைக்கத்தொடங்கிவிட்டது.

ஒரு நாளா—இரண்டு நாளா—ஓராண்டுக் காலமா—ஈராண்டுக் காலமா—முப்பதாண்டுக் காலமாகவல்லவா நண்பர் ஜீவாவுடன் நாம் நெருங்கிப் பழகி வந்திருக்கின்றோம்-அன்புடன் அளவளாவி வந்திருக்கின்றோம்.

அரசியல் துறை பற்றி மட்டுமா அவர் நம்மை விசாரித்திருக்கின்றார்? அது மட்டும்தான் என்றால் அவர் இறந்தார்

என்ற செய்தி நமது உள்ளத்தை இந்த அளவில் வாட்டி வதைத்திட முடியாதே.

இன்முகங்காட்டிக் குடும்ப நலம் கேட்பார்—பரிவு வெளிப்பட உடல்நலம் விசாரிப்பார்—கனிவு சொட்ட உற்ருர் உறவினர் போன்ற நெருங்கிய சுற்றத்தார் நலம் கேட்டறிவார்; இறுதியாக அரசியல் துறையில் கருத்தைச் செலுத்தி, 'அண்ணு நலமா?' என்று தொடங்கி, கழகக் கருத்தில் தாம் கொண்டிருக்கக்கூடிய கருத்துப் பிணக்கைக் கட்டவிழ்த்துவிடுவார் தம்மியல்புப்படி நண்பர் ஜீவா. எனவே, குடும்பத்தில் ஒருவர்போல் நம்முடன் ஆண்டுக் கணக்கில் பழகிவிட்ட ஜீவாவை—காலத்தால் நாம் மறக்கத் துணிந்தாலும்—நமது நெஞ்சு மறந்திடாதே!

செந்தமிழ் நாட்டின் தென்கோடியில் தமிழ் வழங்கிடும் நாஞ்சில் நாட்டில் சிற்றூரான பூதப்பாண்டியில் சரியாக 57 ஆண்டுகளுக்கு முன் பிறந்த ஜீவா தன்னல மறுப்பையே தனது வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டு, தொண்டுள்ளம் பெற்றவராகத் திகழ்ந்தார். காங்கிரசுக் கட்சியுடன் தனது அரசியல் பொது வாழ்வைப் பிணைத்துக்கொண்டார்.

சுயமரியாதை இயக்கத்தின் சமுதாய சீர்திருத்தக்கருத்துக்கள் நண்பர் ஜீவாவின் பிஞ்சு உள்ளத்தை ஈர்த்துவிட்டது. சுயமரியாதைப் பிரசார மேடையில் அஞ்சாநெஞ்சன் அழகிரிசாமிக்கு இணையாக நண்பர் ஜீவா சிறப்பெய்தினுர்.

காலஞ்சென்ற சிங்காரவேலர் அவர்களின் நட்பு, ஜீவா அவர்களைப் 'பொதுவுடைமை' இலட்சியத்தின் பால் பற்றுக் கொள்ளச் செய்தது. இத்தருணத்தில் சுயமரியாதை சமதர்ம இயக்கம் கண்டார். அதன் ஆக்கத்திற்கெனத் தமிழகமெங்கும் சுற்றித் திரிந்து சண்டமாருதச் சொற்பொழிவுகளைச் செய்தார் ஜீவா.

சுயமரியாதை இயக்கத்தின் இயல்புக்குள் நண்பர் ஜீவாவின்நோக்கும் போக்கும் அடங்குவதாக இல்லை. ஜீவா பொதுவுடமைக் கட்சியில் இரண்டறக் கலந்து பணிபுரியத் தொடங்கிவிட்டார்.

பொதுவுடமைக் கட்சியின் இலட்சியங்களையும் முடிவுகளையும் பொது மேடைகளிலிருந்து விளக்கிக்கூறுவதில்,அக் கட்சியில் ஜீவாவுக்கு இணையாக வேறு எவரையும் மதிப்பிட்டுக்கூறுவதிற்கில்லை. அவருக்கு இணை அவரேதான்.

தமிழ் இலக்கியங்களில் அவருக்குப் பிடித்தமான நூற்கள் கம்ப இராமாயணமும், பாரதியாரின் கவிதைகளுமாகும். அவர் அக்கவிதைகளுக்குப் பொருள் விரித்துக்கூறும் போக்கே தனி.

நண்பர் ஜீவாவின் அரசியல் இலட்சியம் எதுவானாலும் தமிழ் மொழி வளர்ச்சியில் அவர் மிகுதியான அக்கறையும் பற்றும் காட்டி வந்திருக்கின்றார்.

அந்தக் காலத்து காங்கிரசுக்கட்சியின் வளர்ச்சிகாலஞ் சென்ற சத்தியமூர்த்தி அவர்களின் ஆவேசப் பேச்சுக்களினால்தான் என்ற உண்மையை எவரும் ஒப்புவர். அதே போலத்தான் தமிழகத்தைப் பொறுத்த வரையில் பொதுவுடமைக் கட்சிக்குக் கிடைத்திருக்கக்கூடிய மதிப்புக்கு தோழர் ஜீவா அவர்களின் வீராவேசப் பேச்சுக்களே அடிப்படைக் காரணமாகும்.

தலைப்பில் குறிப்பிட்டிருக்கக் கூடிய இசைப்பாட்டு இருபதாண்டுகளுக்கு முன் ஜீவர்வால் இயற்றப்பட்டதாகும் இப்பாட்டை அவரே பாடக் கேட்டவர் சிலரேயாவர்.

நண்பர் ஜீவாவின் மறைவு பொதுவுடமைக் கட்சிக்கு மட்டுமே ஏற்பட்ட நட்டம் என்பது பொருந்தாது; தமிழகம் முழுதுக்கும் ஏற்பட்டுவிட்ட ஈடு செய்யமுடியாத பெரு

நட்டமாகும்—தமிழ் மொழிக்கு ஏற்பட்ட நட்டமாகும்—தன்னலமறுத்துத் தொண்டுள்ளம் பெற்றிருக்கக்கூடிய அனைவருக்குமே ஏற்பட்டுவிட்ட நட்டமாகும்.

கணவனை இழந்து கண்களில் நீர் சொறிய உள்ளக் குமுறலுடன் காட்சிதரும் சகோதரியார் பத்மாவதி அம்மையார் அவர்களுக்கும், தந்தையைப் பிரிந்து அழுது அரற்றிக் கொண்டிருக்கும் அவருடைய மூன்று செல்வங்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தையும் ஆறுதலையும் கண்ணீரால் காணிக்கையாக்குகிறோம்.

அன்பன்,
காஞ்சி கல்யாணசுந்தரம்
பொறுப்பாசிரியர் நம்நாடு
19—1—63

## தோன்றாத் துணைவர்!

தமிழூரின் பூந்தோட்டத்தில் மணம் வீசும் மலர்களைத் திடீர் திடீரென காலமெனும் கள்ளன் பறித்தழிக்கிறான்.

அந்தோ, மனதை மலரச் செய்யும் மாண்புகள் படைத்த நமது நண்பர்களை நாம் இழக்கும் கொடுமையில் அடிக்கடி சிக்கி அவதியுறுகிறோம்.

தமிழூரின் நறுமணச் சோலை வேலியற்றதோ!

ஏதோ, காலக் கள்ளனின் கன்னெஞ்சத்தின் காரணம்! பெறற்கரியவர்களைப் பெற்று, இனி நமக்கென்ன குறை என்று தமிழன் இறுமாந்திருக்கும் வேளையில் எப்படியோ இடர் நம்மைத் தாக்கி நமது இன்ப எண்ணங்களை அழித்தொழிக்கிறது. இதனை என்னென்போம்!

நாடும் மொழியும் சிறந்து, வளம்பெற நாளும் உழைத்த நல்லவர் பலரை ஏற்கனவே சூறையாடிச் சென்ற

அதே மரணம் தனது பசி அடங்கப்பெறுமல் சென்ற வாரம், சிரித்த முகத்தழகர், சீர்மிகு குணக்குன்று, தொழிலாளி வர்க்கத்தின் தோன்றுத் துணைவர், இலக்கியச் செல்வர் தோழர். ப. ஜீவானந்தம் அவர்களையும் கவர்ந்து சென்று விட்டது.

அதிர்ச்சி தரும் இச்செய்தி கேட்ட அனைவரும் துடித்தனர்.

நீர் சுரக்கும் கண்கள் தமிழகத்து வீதிகள் தோறும்!

ஏதேதோ எண்ணுவதும், என் செய்வோம் என பதறி நிற்பதுமாக குழம்பிய நிலையில் கூட்டம் கூட்டமாக மக்கள்.

வெந்த அந்த உள்ளத்தினர் சிந்தையில் தெளிவு ஏற்படவில்லை. கசங்கிய கண்கள் பழைய நிலை பெறவில்லை. துடித்த நெஞ்சம் துடித்தபடியே இருக்கிறது.

தோழர் ஜீவானந்தம் அவர்கள் இந்திய விடுதலைப் போராட்டத்தின் முன்னேடி. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களில் மிக முக்கியமானவர். அக்கட்சியின் நாளிதழான 'ஜனசக்தி'யின் ஆசிரியர், இலக்கியப் பெருங் கடல், எழுச்சி முரசம்!

நாட்டுப் பற்று மிகக்கொண்ட அந்த நல்லவர் நெருக்கடி மிக்க இந்த நேரத்தில் நம்மிடம் இல்லை. அவர் மறைந்துவிட்டார். அவரது மறைவால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது என்றுரைப்பது சம்பிர தாயத்தைக் கடந்த பேச்சு.

அவரது குடும்பத்தார்க்கு நம் ஆழ்ந்த அனுதாபத்தை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

காலத்தை எண்ணி மிகக் கலங்குகிறோம்.

நம் நிலையே இதுவெனில் அவரது குடும்பத்தினரின் நிலைமை யாதாயிருக்கும். நினைக்கவும் நெஞ்சு வேகிறது!

—இனமுழக்கம்—

## உண்மையான தலைவன்

நல்ல தலைவனை நாடு இழந்தது.

உண்மையான ஒரு தலைவனை, உழைப்பாள வர்க்கத்தின் பிரதிநிதியை, இலட்சிய புருஷனை, கொள்கை வீரனை தமிழ்நாடு இழந்துவிட்டது. திரு. ஜீவானந்தம் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டார்.

பதவிக்கும் — பணத்துக்கும் — விளம்பரத்துக்கும்— அதிகார வெறிக்கும் பொதுவாழ்வை கருவியாக பயன் படுத்தும் அரசியல் அரங்கில், ஜீவா அப்பாற்பட்டவராகத் திகழ்ந்தார்.

மேடையேறி நாலு வார்த்தைகள் பேசத் தெரிந்தவனும், பேனா பிடித்து இரண்டு வரிகள் எழுதத் தெரிந்தவனும் தலைவனாக மாறி வருகிற போலித்தனமான பொது வாழ்க்கையில் ஜீவா ஒரு நிறைகுடமாக இருந்தவர்.

மக்கள் மத்தியில் கிடைக்கிற செல்வாக்கை சுயநலத்துக்குப் பயன்படுத்தி சுகபோகியாகிவிடுவதுதான் இந்தக் கால தலைமைப் பண்பு. முப்பதாண்டுக்கு மேலாக, காது ஜவ்வுகள் கிழிந்து செவிடாகும் வரையில் கத்திக் கத்தி, சுற்றிச் சுற்றி சேவைபுரிந்ததைத் தவிர, தனக்கென கடைசி வரையிலும் வாழவில்லை ஜீவா. அதனால்தான் எத்தனையோ தலைவர்களின் தினசரி வாழ்வை நேரடியாக கண்டு வருகிற நமக்கு ஜீவாவை மட்டும் உண்மையான தலைவன் என்று ஒப்புக்கொள்ள முடிந்தது.

பேச்சுக்களெல்லாம்மேடைப்பேச்சாகுமா? "பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடரிமயிரைப் பிடித்து ஆட்டி, அதன் கோரப் பற்களை உடைத்து, குடலைப் பிடுங்கி......" என்ற ஜீவாவின் சிங்கநாதம் இன்னும் நமது காதுகளில் ரீங்காரம் செய்துகொண்டிருக்கிறது! வீழ்ந்து கிடக்கிறவனுக்கு— அடித்தளத்தில் கிடந்து நசுங்குபவனுக்கு — நெஞ்சில் தைக்கும்படி உணர்ச்சியைக் கிளறிவிடும் பிரசங்கம் செய்ய ஜீவாவைத் தவிர வேறு நாதி கிடையாதே!

ஜீவாவின் எழுத்துக்கள் ஜீவன் நிரம்பியவை. அநாவசியமான அலங்காரங்கள்—அடுக்குவார்த்தைகள்—அர்த்தமற்ற வர்ணனைகளை ஜீவாவிடம் காணமுடியாது. எடுத்துக்கொண்ட விஷயத்துக்குள் நேரடியாகப் புகுந்து ஈட்டிகொண்டு எறிவதுபோல கருத்துக்களை சொல்லிவிடுகிற தனித் தன்மை ஜீவாவுக்கே உரியது.

எதையும் பூரணமாகத் தெரிந்து வைத்து, ஆராய்ச்சி செய்து, விஷயங்களுக்கு பஞ்சம் இல்லாமல் சரமாரியாக கருத்துக்களை வீசுகிற முழுமை பெற்ற பேரறிஞுக ஜீவா இருந்தார். கம்பனைத் தொட்டால் அடி முதல் முடிவரையிலும் ஜீவாவுக்குத் தெரியும். பாரதி பாடலா, வரிக்கு வரி வியாக்கியானம் செய்ய ஜீவாவால் முடியும். மேல்நாட்டு இலக்கியங்களா, மேற்கோள் காட்டி ஜீவாவால் வாதாட முடியும்.

குறளில் இரண்டு அடி—பாரதி பாடலில் பத்து வரி— கம்பராமாயணத்தில் கால்பாட்டு—புறநானூற்றில் அரைப் பாட்டு—மாத்திரம் மனப்பாடம் செய்து வைத்துக்கொண்டு மேடைகளில் எகிறிக் குதிக்கும் 'போலி'களுக்கு மத்தியில் ஜீவா ஒரு பூரண இலக்கிய மேதையாகத் திகழ்ந்தவர்.

ஜீவா எந்தக் கட்சியில் இருந்திருந்தாலும் நமக்குக் கவலையில்லை. ஒரு குறிப்பிட்ட லட்சியத்துக்காக சர்வ

தியாகமும் செய்தார் என்பதில் பெருமை கொள்ளாமல் இருக்கமுடியாது. பாராட்டாமல் முடியாது.

சுயநலம் துளியும் கலவாத தூய பொதுவாழ்வுக்காக தன்னை அர்ப்பணித்துக்கொண்ட ஜீவாவிடமிருந்து இளந் தலைமுறைகள் கற்றுக்கொள்ள வேண்டியது ஏராள முண்டு.

தோழன் ஜீவாவை ஏழைகள் இழந்துவிட்டார்கள். புனிதமான ஒரு பொதுநலத் தொண்டனை மக்கள் இழந்து விட்டார்கள். சிறந்த ஒரு சிந்தனையாளனை இலக்கிய உலகம் இழந்துவிட்டது. தமிழ்நாடு கம்யூனிஸ்ட்கட்சி, தன்னைக் கட்டிக் காத்தவனை இழந்துவிட்டது.

ஜீவாவின் புகழ் வாழட்டும்!

அவரின் மனைவி மக்களுக்கு எனது ஆழ்ந்த அனுதாபங் களை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

'சிம்மக்குரல்'
தங்கப்பழம்.

## கர்ம வீரன் !

## காலம் : 1927

காந்திஜி : உங்களுக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா ?

ஜீவா : எனக்கென்று ஏதுமில்லை. இந்தியாதான் என் சொத்து.

காந்திஜி : அப்படி அல்ல; நீங்கள்தான் இந்தியாவின் சொத்து.

காலத்தேவா ! ஒரு கர்மவீரனை தனக்கென்று வாழாத வனை தன்னிகரற்ற செயல் வீரனை சமுதாய முற்போக்

ாளனே எதுக்காக கவர்ந்து சென்ருய் ? எங்களுக்கெல் ாம் அவன் செய்த சேவையை நீயும் பெறவேண்டும் ான்ற எண்ணத்திலா ?

பரணி, 1—2—63.

## கறைபடியா வரலாறு !

பாரதியாரின் பிறந்ததின விழாவின்போது நமது பெரு ாதிப்பிற்குறிய ஜீவாவை கடைசியாக பார்த்தபோது அவரு டைய இறப்பு இப்படி " மின்வேகத்தில் " நிகழ்ந்துவிடும் ான கற்பனைக்குக்கூட நினைத்துப் பார்க்க முடியவில்லை !

ஆனாலும், நம்மை கதிகலங்க கண்ணீர்சிந்தவிட்டு நமது ாத்தமான' கரைபடியாத வரலாற்றை முடித்துக்கொண்டு அவர் அமரராகி விட்டார் !

ஜீவாவிற்கு நம்மை விட்டு, அவரை நம்பி வாழும் தாழிலாளத் தோழர்களை விட்டு எப்படித்தான் பிரிய டிந்ததோ ?

பாரதியாரின் பாடல்களை எப்படி விட்டுப்போனாரோ ? ம்பனின் கவினாறும் இலக்கியங்களை விட்டு எப்படித்தான் ண் மூடினாரோ ?

தூய்மை நிறைந்த வாழ்க்கையின் கணக்கை தீர்த்துக் காள்ள அவருக்கு எப்படித்தான் தீரம் வந்ததோ ?

ஜீவா அமரராகி விட்டார் என்பதை நம்மாலே நம்ப டியவில்லை ! எங்கோ ஏதோ சேவை செய்து கொண்டி க்கிருர் என்ற எண்ணமே நம்மைச் சுற்றிச் சுற்றி வந்து காண்டிருக்கிறது !

காரில்லை, கைநிறையப் பணமில்லை ! சொந்தமென ஒரு ட்டு வீடுகூட இல்லை ! பொன்விழா இல்லை ! உயிரோடு

கொண்டாடிய ஒரு பிறந்தநின விழா இல்லை! - பத்திரிகைகளின் "எட்டுக் காலத்தை "யே குறிக்கோளாகக் கொண்டு அரசியல் நடத்தியதில்லை!

மனைவி எங்கேயோ? அருமைக்குழந்தைகள் எங்கேயோ? தனது சேவைகள் எங்கேயோ? அவரால் ஒளி பெறும் மைதான மேடைகள் எங்கேயோ? அந்தஸ்தைத் தேடிக் கொள்ள " ஆலா"ப் பறக்கிற இந்த நாட்களில் இப்படிஒரு பொது நலத் தொண்டனை இனியும் நம் ஆயுளில் பார்க்கத்தான் போகிறோமா?

தாம்பரத்தில் ஒரு முறை வெள்ளத்தால் குடிசைகள் அடித்துக்கொண்டு போனபோது, குடிசைகள் நிறைந்த அந்த பகுதிக்கு நமது முதலமைச்சர் சென்றார். குடிசை வாழ் மக்களிடையே தானும் ஒருவராய் நின்ற ஜீவாவைக் கண்டு நமது முதலமைச்சர் கலங்கினார். முப்பது வருட பொது வாழ்வில் தேய்ந்து ஓடாகிய அவரது நிலைகண்டு வருந்தினார்.

தாம்பரத்து குடிசைவாழ் மக்களின் குறைகள் மட்டும் தீர்க்கப்பட வில்லை! பொது வாழ்வின் விசித்திர சித்தத்தால் ஒதுங்கி வாழ்ந்த ஜீவாவின் வாழ்வும் நிறை பெறலாயிற்று. இந்த அரிய சேவையை ஜீவாவிற்கு நமது முதலமைச்சர் செய்திராதிருந்தால், நாம் ஜீவாவை எ போதோ இழந்திருக்கக்கூடும்.

"பதவியில் உயர்ந்திருப்பவர்கள் உள்ளத்தால் உயர் திருப்பதில்லை! ஆனால் காமராஜரோ பதவியால் உயர் ததைவிட உள்ளத்தால் உயர்ந்திருக்கிறார் என்று அவ உயர்த்தி சொன்ன வார்த்தைகள் இன்னமும் நமது செ யின் இதயத்தில் நிறைந்திருக்கிறது.

வாழ்வின் கடைசி முற்றுப் புள்ளியும் கடந்துவிட் அவரை நம்மால் எப்படித்தான் மறக்கமுடியும்? அவருடை

மறைவுச் செய்தியைக்கூட பிரசுரிக்க மனமில்லாத 'மாபாவி களின்' உலகம் வேண்டாமென்று போய்விட்டாரோ ?

மேனு மினுக்கிகளுக்கித்தான் காலமும் பொதுவாழ்வும் ஒத்துவரும்; என்னைப் போன்ற சிறை கம்பிகளிடையேயும், ஏழைகளுக்கிடையேயும், தழும்புகளுக்கிடையேயும், பெரு மூச்சுகளிடையேயும் வாழ்பவர்களுக்கு இது தகாத உலகம் என்றறிந்துதான் சென்று விட்டாரோ ?

தொழிலாளர் சொர்க்கம் சென்று வந்தேன் இடையே எனக்கேன் மாபாவிகள் நிறைந்த நரகம் என்று அமரர் வாழும் சொர்க்கம் சென்றுவிட்டாரோ ?

அமரர் ஜீவாவின் தாங்கவொண்ணுத பிரிவை தாங்கி தவிக்கும் தமிழ் அன்னைக்கு நம்முடைய ஆழ்ந்த அனுதாபத் தையும் ஆறுதலையும் தருவதைத்தவிர நம்மால் வேறுஎன்ன செய்யமுடியும் ?

உதயம்

## தியாக சீலர் !

பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களில் ஒருவரும் ஜனசக்தி நாளிதழின் ஆசிரியருமான திரு. ப. ஜீவானந்தம் அவர்கள் கடந்த 18-1-63 வெள்ளியன்று இவ்வுலகை விட்டுப் பிரிந்த செய்தி கேட்டு அதிர்ச்சியில் நாட்டு உள்ளங் களெல்லாம் துடித்தன.

அவருடைய நாட்டுப் பற்றையும், சுயநலமின்மை யும் போற்றுதார் எவருமிலர்.

பொதுத் தொண்டில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தியாக சீலரே ஜீவா அவர்கள். அவருடைய பிறவு நாட்டுக்கு ஈடுசெய்ய முடியாத ஒன்றாகும்.

—சுடர்க்கொடி.

கொண்டாடிய ஒரு பிறந்ததின விழா இல்லை! - பத்திரிகை களின் "எட்டுக் காலத்தை"யே குறிக்கோளாகக் கொண்டு அரசியல் நடத்தியதில்லை!

மனைவி எங்கேயோ? அருமைக் குழந்தைகள் எங்கேயோ? தனது சேவைகள் எங்கேயோ? அவரால் ஒளி பெறும் மைதான மேடைகள் எங்கேயோ! அந்தஸ்தைத் தேடிக் கொள்ள " ஆலா"ப் பறக்கிற இந்த நாட்களில் இப்படி ஒரு பொது நலத் தொண்டனை இனியும் நம் ஆயுளில் பார்க்கத்தான் போகிறோமா?

தாம்பரத்தில் ஒரு முறை வெள்ளத்தால் குடிசைகள் அடித்துக்கொண்டு போனபோது, குடிசைகள் நிறைந்த அந்த பகுதிக்கு நமது முதலமைச்சர் சென்றார். குடிசை வாழ் மக்களிடையே தானும் ஒருவராய் நின்ற ஜீவாவைக் கண்டு நமது முதலமைச்சர் கலங்கினார். முப்பது வருட பொது வாழ்வில் தேய்ந்து ஓடாகிய அவரது நிலைகண்டு வருந்தினார்.

தாம்பரத்து குடிசைவாழ் மக்களின் குறைகள் மட்டும் தீர்க்கப்பட வில்லை! பொது வாழ்வின் விசித்திர சித்தத்தால் ஒதுங்கி வாழ்ந்த ஜீவாவின் வாழ்வும் நிறைவு பெறலாயிற்று. இந்த அரிய சேவையை ஜீவாவிற்கு நமது முதலமைச்சர் செய்திராதிருந்தால், நாம் ஜீவாவை எப்போதோ இழந்திருக்கக்கூடும்.

"பதவியில் உயர்ந்திருப்பவர்கள் உள்ளத்தால் உயர்ந்திருப்பதில்லை! ஆனால் காமராஜரோ பதவியால் உயர்ந்ததைவிட உள்ளத்தால் உயர்ந்திருக்கிறார் என்று அவர் உயர்த்தி சொன்ன வார்த்தைகள் இன்னமும் நமது செவியின் இதயத்தில் நிறைந்திருக்கிறது.

வாழ்வின் கடைசி முற்றுப் புள்ளியும் கடந்துவிட்ட அவரை நம்மால் எப்படித்தான் மறக்கமுடியும்? அவருடைய

மறைவுச் செய்தியைக்கூடபிரசுரிக்க மனமில்லாத 'மாபாவி களின்' உலகம் வேண்டாமென்று போய்விட்டாரோ?

மேனு மினுக்கிகளுக்கித்தான் காலமும் பொதுவாழ்வும் ஒத்துவரும்; என்னைப் போன்ற சிறை கம்பிகளிடையேயும், ஏழைகளுக்கிடையேயும், தழும்புகளுக்கிடையேயும், பெரு மூச்சுகளிடையேயும் வாழ்பவர்களுக்கு இது தகாத உலகம் என்றறிந்துதான் சென்று விட்டாரோ?

தொழிலாளர் சொர்க்கம் சென்று வந்தேன் இடையே எனக்கேன் மாபாவிகள் நிறைந்த நரகம் என்று அமரர் வாழும் சொர்க்கம் சென்றுவிட்டாரோ?

அமரர் ஜீவாவின் தாங்கவொண்ணுத பிரிவை தாங்கி தவிக்கும் தமிழ் அன்னைக்கு நம்முடைய ஆழ்ந்தஅனுதாபத் தையும் ஆறுதலையும் தருவதைத்தவிர நம்மால் வேறுஎன்ன செய்யமுடியும்?

உதயம்

## தியாக சீலர்!

பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களில் ஒருவரும் ஜனசக்தி நாளிதழின் ஆசிரியருமான திரு. ப. ஜீவானந்தம் அவர்கள் கடந்த 18-1-63 வெள்ளியன்று இவ்வுலகை விட்டுப் பிரிந்த செய்தி கேட்டு அதிர்ச்சியில் நாட்டு உள்ளங் களெல்லாம் துடித்தன.

அவருடைய நாட்டுப் பற்றையும், சுயநலமின்மை யையும் போற்றுதார் எவருமிலர்.

பொதுத் தொண்டில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தியாக சீலரே ஜீவா அவர்கள். அவருடைய மறைவு நாட்டுக்கு ஈடுசெய்ய முடியாத ஒன்றுகும்.

—சுட்டிக்கொடி

## துயரடைந்தோம் ஜீவா !

தோழர் ஜீவா மறைவுச் செய்தி கேட்டு ஆழ்ந்த துயர மடைந்தோம். அவரது பிரிவால் வாடும் குடும்பத்தின ருக்கும், தோழர்களுக்கும் எங்கள் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

—கம்யூனிஸ்ட் கட்சி கர்நாடக வார இதழ் ஜனசக்தி—

## நாளை நான் சிரிப்பேன் !

இயற்கைத் தாயே ! இதயமிலாதாளே ! ஈரமிலா நெஞ்சினரின் கோப்பெருந்தேவி! குறை என்ன கண்டாய் ? குறைமிக்க மாந்தரிலும் நிறையே கண்ட நிறைகுடத்தின் மீதென்ன குறைதான் கண்டாய் ?

வங்கியிலே கணக்கில்லாத் தலைவன் அவன் தாயே! அவன் வாழ்விற்கோ கணக்கு வைத்தாய் கல் நெஞ்சுக்காரி! மண்ணுலகை நீப்பதற்கு முதல் நாள் மாலை! பூதானக் கூட்டத்தில் முதலமைச்சரைக் கண்டான். "தாம்பரத்தின் தரிசு நிலக் குடிகளுக்கு குடியுரிமை தரும் நாள் என்றோ ?" என்றவன் தான் கேட்டு நின்றான். " பார்க்கின்றேன் " என்றுரைத்தார் முதலமைச்சர் பெருமான் ! குருவிக்குக் கூடுண்டு, பாம்புக்கும் புற்றுண்டு—மாந்தர்க்கு குந்தக் குடிசையில்லை ! கொடுமை ! கொடுமை ! என்றவன் தான் நாளெல்லாம் சீறி நின்றான் ! புயலானான் ! எனில் பிறர் துயர் கண்டு துயருற்ற மனிதனுக்கோ சொத்தென்று குடியில்லை—வீடில்லை—வாசலில்லை—இறுதிவரை தரிசுநிலம் புறம்போக்குக் குடிலில் வாழ்ந்தான். அந்நிலமோ இன்று வரை ஆட்சி சொத்து.

பட்டிதொட்டி எல்லாம் சிறகடித்து பறந்து சென்ற வானம்பாடி எங்கே? இயற்கை வல்லூறே நீ கொத்திச் சென்ருய். அந்த வானம்பாடி இல்லாத வானம் வெறிச் சிட்டுவிட்டது. அந்தத் தமிழ்த் தேனில்லாத மலர்க்காடு மக்கிவிட்டது. அந்தச் சிங்கம் இல்லாத காடு அழிந்து விட்டது. அந்தப் புலவன் இல்லாத அவையிலே மயானத்து அமைதி நிலவுகிறது. அந்தக் கவிஞன் இல்லாத அரங்கம் உறங்கிவிட்டது. அந்தக் கலங்கரையை காணுத தமிழகம் தத்தளிக்கிறது. அந்த மனிதன் இல்லாத உலகம் இருண்டு விட்டது. திரைகடல்போல் முழக்கமிட்ட தீரன் எங்கே? முரசதிரும் அறப்போரின் முனையை நோக்கி படைதிரட்டிச் சென்ற நல் வீரன் எங்கே?

துயர் பலவே எதிர்ப்பட்டாலும் துளியேனும் கலங்காது துணிவுகொண்டு உரைக்கின்ற சொல்லாளன் எங்கே?

தியாகத் திரு உருவத்தை சாவென்னும் துணைகொண்டு நீ கவர்ந்து சென்ருய். இன்று நீ வென்ருய் உண்மை! நல்ல மனிதர்களெல்லாம் வாழ்வதற்கே என் தோழன் சோவியத்தில் அருமருந்து காண்கிருன். அம்மருந்தென்னும் ஆயுதத்தால் உன் உடலைக் கிழிப்போம்—உனை வெட்டிச் சாய்ப்போம். சிரிக்காதே! பெரும் சிரிப்புக்காரி! நான் அழுகின்றேன்—நீ சிரிக்கின்ருய்—நாளை நான் சிரிப்பேன்—நீ அழுவாய். கதிரவனைக் கண்டு அழுகின்ற அந்திமல்லி போல் நீ அழுவாய்—அவன் தந்த • தாமரைப்போல் நான் சிரிப்பேன்; காலமெல்லாம் காத்திருப்பேன்.

—சமரன் "சோலை"

## தமிழ் நாட்டு ஸ்டாலின்!

தோழர் ஜீவானந்தம் மறைவு தமிழ் நாட்டு பொது வாழ்க்கைக்கே அதிர்ச்சி! தமிழ் நாட்டு பொது வாழ்க்கைக்கே அதிர்ச்சி என்றால், அவருடன் நாற்பது ஆண்டுகளாக நெருங்கிப் பழகிய நண்பர்கட்கு எத்தகைய அதிர்ச்சி!!

அவருடைய அரும் தொண்டினால் வளர்ச்சிப் பெற்றிருக்கும் அவரது கட்சிக்கு எவ்வளவு பெரும் அதிர்ச்சி!!

இந்த நாட்டில் எழுத்து, பேச்சு, நடத்தை மூன்றிலும் நேர்மையாகவும் நாணயமாகவும் இருக்கின்ற பொது மக்கள் தலைவர்களை விரல்விட்டு எண்ணி விடலாம், அவர்களில் தோழர் ஜீவானந்தமும் ஒருவர்.

**வறுமையில் பிறந்து வறுமையில் வளர்ந்து வறுமையை ஒட்டும் பணியிலேயே வாழ்நாள் முழுதும் ஈடுபட்டு வறுமையை தழுவியபடியே இறுதி மூச்சு விட்டவர் ஜீவா.**

கொள்கையிலும் ஸ்டாலின்.
உறுதியிலும் ஸ்டாலின்.
தோற்றத்திலும் ஸ்டாலின்.
தமிழ் நாட்டு ஸ்டாலின் மறைந்தார்.

— "குத்தூசி"

## இனி யார் துணை ?

மூவாத் தமிழ் முழங்க முன்னின் றெளியவர்கள்
நாவாய்க் குரல் கொடுக்க நாமார் துணை பெறுவோம்
ஜீவானந் தத்தை யிழந்திங் இனியென்றும்
ஓவாத் துயரால் உலைந்து !

— நா. பார்த்தசாரதி
தேசாபிமானி 17-2-63

## நெருக்கடி நிலையிலும் நல்ல வழிகாட்டி

தோழர் ப. ஜீவானந்தம் அவர்களின் மறைவு தமிழகத்தையே திடுக்கிடச் செய்துவிட்டது. இந்தியா வெங்குமே துக்கச் சூழ்நிலையை உண்டு பண்ணியது. நேற்றைக்கு முன்னுளுடன் வாழ்வு முடிந்து இயற்கை எய்தி விட்டார். தோழர் ஜீவானந்தம் அவர்கள் இந்நாட்டு மக்களிடம், ஏழைத் தொழிலாளி வர்க்கத்தினரிடம் வைத்த பற்றும், அவர்களுக்காக உழைக்க வேண்டும்; உழைக்கவேண்டும் என்று தளராது உழைக்கத் தூண்டும் உள்ள உணர்ச்சியும் அவர் உடலுடன் மறையவில்லை; மறையாது. உடலை எரிக்கையில் வந்திருந்த பல்லாயிரவர் களும் அவரையே நினைந்து துக்கித்தனர். நாடெங்கும் நின்ற பலகோடி மக்களுக்கும் தியாக உணர்வை ஊட்டிச் சென்றுவிட்டார் தோழர் ஜீவானந்தம். நாட்டுக்காகவே வாழ்ந்தார்; நாட்டின் பணியிலேயே தன் வாழ்நாளைக் கழித்தார். தந்தை பெரியாரின் உறுதுணைவராய் இந்நாட்டு மக்களை சுயமரியாதை வழியில் இழுத்துச் சென்ற உழைப் பாளி, வழிகாட்டி, உத்தமன். அவர் மறைந்தாலும் அவர் உழைப்பும் ஊக்கமும் என்றும் இந்நாட்டு மக்களை நல்வழி யில் நடத்திச் செல்லும் என்பதில் ஐயமில்லை.

ஏழ்மையில் உழன்று, நேர்மையில் உயர்ந்தவர். அரசிய லிலும் நேர்மையாகப் பணிபுரியலாம், பதவியில்லாமலும் நாட்டுக்கு உழைக்கலாம் என்பதற்கு உதாரண புருஷராக விளங்கிய ப. ஜீவானந்தம் அவர்கள், நெருக்கடி நிலையிலும் நல்ல வழிகாட்டினூர். தம் கட்சியிலும் நாட்டின் பாதுகாப் பில் தீவிரம் காட்டி, சதிகாரர்களையும் அம்பலப்படுத்தி சிறந்த நாட்டுப்பற்றுள்ளவராக நடந்துகொண்ட தோழர் ஜீவாவின் திடீர்மறைவு நாட்டுக்கு உண்மையிலேயே பெரிய இழப்பாகும். சிறந்த தியாகியின் குடும்பத்தாருக்கு நமது அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இ. க. நாளிதழ் விடுதலை

## சிறந்த தேசபக்தர்!

கம்யூனிஸ்ட் கட்சியின் பிரபல தலைவர் திரு. ப. ஜீவானந்தம் நேற்று திடீரென்று மாரடைப்பால் காலமானதைக் குறித்து வருந்துகிறோம். அவர் பல ஆண்டுகள் கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்து பாடுபட்டவர் என்ருலும், சுதந்தரப் போராட்டத்தில் காங்கிரஸ்காரராகக் கலந்துகொண்டு சிறை சென்ற சிறந்த தேச பக்தர் ஆவார். பள்ளிப் படிப்பின் போதே காந்திஜியின் சுதந்தர முழக்கத்தைக் கேட்டுத் தேசப் பணியில் இறங்கினர். பலமுறை சிறை சென்று பல தியாகங்கள் செய்தார். அரசியலைப் போலவே சமூக சீர்திருத்தம், இலக்கியம் முதலிய துறைகளிலும் அவர் செய்துள்ள சீரிய தொண்டுகள் பல. அவரது இணையற்ற சொற்பொழிவாற்றலைக் கண்டு பிரமிக்காதவர் இல்லை என்றே சொல்லிவிடலாம். கம்பீரமான குரலில் உணர்ச்சி வேகத்துடன் வாசாம கோசமாக அவர்பொழிந்த சொற்பொழிவுகள் இனி வெகு காலத்துக்கு அனைவர் செவியிலும் ஒலித்துக் கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. கம்பர், வள்ளுவர், பாரதி போன்ற பெருங்கவிஞர்களைப் பற்றி அவர் நிகழ்த்தியுள்ள ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் இலக்கிய அறிஞர்கள் அனைவருக்குமே பெரும் வியப்பை அளித்தது. பேச்சைப் போலவே எழுத்திலும் வல்லவராக விளங்கினர் அவர்.

திரு. ஜீவானந்தம் கட்சிக் கோட்பாட்டில் நமக்கு மாறுபாடு உண்டு. ஆயினும் அவர் தன்னலமின்றி பொதுவாழ்க்கையிலேயே தமது வாழ்நாளை அர்ப்பணித்தவர், நாட்டுப் பணியைத் தவிர வேறு சொந்த நலன்களைப் பற்றிச் சிறிதும் எண்ணுதவர். எனவே அவரது மறைவு, கம்யூனிஸ்ட் கட்சிக்கு மட்டுமின்றி, தமிழ் நாட்டுக்கும் தமிழ் இலக்கியத்துக்குமே ஈடு செய்ய முடியாத பெரு நஷ்டமாகும். அவரது ஆன்மா சாந்தியடையப்பிரார்த்திக்கிறோம்.

தேசிய நாளிதழ் நவசக்தி.

# சொற்கொண்டல் ஜீவா!

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களில் ஒருவரும், சுயமரி யாதை இயக்கத்தின் சுடரொளியுமான திரு. ஜீவானந்தம் அவர்கள் 18-1-63 காலை 7-30 மணிக்கு இயற்கையெய்தினார் என்ற செய்தியை அறிந்து வருந்துகிறோம்.

58 வயதான திரு. ஜீவானந்தம் சுயமரியாதைக் கருத் துகளால் ஈர்க்கப்பட்டு, அந்த இயக்கத்தில் பங்கேற்றார். சமதர்மக் கருத்துக்களை தமிழகத்தில் பரப்புவதற்கு பெரிதும் பாடுபட்டார். நாத்திகத்தைப்பற்றி பகவத்சிங் எழுதிய நூலை மொழிபெயர்த்து சிறை ஏகினார். பின்னர் கம்யூனிஸ்ட் கட்சியை அமைப்பதிலும், வளர்ப்பதிலும் ஈடுபட்டார்.

புயல் வேகத்தில் புரட்சிக் கருத்துகளை எடுத்துச் சொல் லும் சொற்கொண்டல் திரு. ஜீவா. இலக்கியத்தில் ஆழ்ந்த நூலறிவும், ஆராய்ச்சித் திறனும் கொண்டவர். நாவன்மைத் தைப் போலவே பாவளமும் மிக்கவர். அவர் இயற்றிய கவிதைகள் தொழிலாளர் உலகத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது.

"காலுக்குச் செருப்புமில்லை
கால்வயிற்றுக் கூழுமில்லை
பாழுக்கு உழைத்தோமடா—என் தோழா
பசையற்றுப் போனோமடா"

இத்தகைய பாடல்கள் தூங்கிக் கிடந்த தொழிலாளர் சமுதாயத்தைத் தட்டி எழுப்பின!

இலக்கியத்தில் சிறந்துவிளங்கியதுபோல, அரசியலிலும் சிறந்து விளங்கினார். கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டியில் அங்கம் வகித்து வந்தார். தமிழகச் சட்ட மன்றத்திலும் உறுப்பினராகப் பணியாற்றியிருக்கிறார். பழக்கத்தில் இனிமையும், சொல்லில் நயமும் படைத்,

அவரது மறைவால் வாடும் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும், தோழர்களுக்கும் எமது ஆழ்ந்த அனு பத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

தி. மு. க. நாளிதழ் '[illegible]'

## தமிழகத்தின் பொதுச் சொத்து!

முப்பதாண்டுகளுக்கு மேலாகத் தமிழகப் பொது வாழ்வில் தன்னலமற்ற சேவை புரிந்து வந்த ஆத்மா சாந்தியடைந்துவிட்டது.

பொதுவுடைமைக் கோட்பாட்டினை உறுதியான அடிப்படையில் தமிழகத்தில் அமைக்க அயராது பாடுபட்ட கரங்கள் செயலற்று விழுந்துவிட்டன.

அரசியல் நுணுக்கங்களை அழகுத் தமிழில் இலக்கிய நயத்தோடு உரைத்துவந்த வாய் இனி என்றுமே பேச முடியாமல் ஊமையாகிவிட்டது.

ஜீவாவின் திடீர் மரணம் தமிழகப் பொது வாழ்க்கையில் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். முப்பதாண்டு காலத் தமிழக அரசியலில் முக்கிய பங்கு வகித்து வந்த அவருடைய தன்னலமற்ற வாழ்க்கை, அரசியலில் ஈடுபட எண்ணியோருக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாய் விளங்கி வந்தது.

மார்க்சியக் கோட்பாடுகளை ஐயம் திரிபறக் கற்ற அவரை, படிப்படியாகக் கம்யூனிஸ்ட் இயக்கம் ஸ்வீகரித்துக் கொண்டது. ஜீவாவின் வருகையால் தமிழும் பொதுவுடைமைக் கோட்பாடும் ஒன்றையொன்று வளப்படுத்திக் கொண்டன.

தமிழக மேடையை இன்றுள்ள அளவுக்குக் கட்டி முடித்த பெருமையில் ஜீவா அவர்களுக்குக் குறிப்பிடத்தக்க பங்கு இருந்தது. அவர் எந்த இயக்கத்தில் பங்குபெற்று உழைத்தாலும், தமிழர்கள் அவரைத் தமிழ்த் தலைவராகவே எண்ணிப் போற்றினார்கள். கட்சி வேறுபாடு கடந்து தமிழகத்தின் பொதுச் சொத்தாகக் கருதப்படும் நிலையையும் ஜீவா பெற்றார்.

ஜீவாவின் பூதவுடல் மறைந்தாலும், தமிழகப் பொது வாழ்வில் அவருடைய புகழுடம்பு அனைவருக்கும் வழி காட்டிக்கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

தேசிய நாளிதழ் தென்றல் திரை

## தேசிய நஷ்டம்!

' ஜீவா இல்லாத ஒரு தமிழ் நாட்டைப்பற்றிச் சிந்தனை செய்து கூடப்பார்க்க முடியாது. அந்த அளவுக்கு தமிழ் நாட்டு மக்களுடன் இரண்டறப் பிணைத்துக் கொண்டதோர் வாழ்க்கை அவரது வாழ்க்கை, 1934-ம் ஆண்டு கம்யூனிஸ்ட் கட்சியில் அவர் சேர்ந்தார். கடந்த முப்பது ஆண்டுகாலமாக தென்னிந்தியாவில் நடைபெற்ற சகலவிதமான முற்போக்கு இயக்கங்களில் எல்லாம் அவர் பங்கு பெற்ருர். அந்த மாபெரும்பிரசங்கியின் பிரசங்கஒலி இன்னும் நமது காதுகளிலே ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. தனித் தமிழனை அந்த ஆஜானுபாகுவின் உருவம் இன்றும் நம் கண்முன் நிற்கிறது.

தமிழ் நாட்டில் தலை சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் தோழர் ஜீவா. ஜீவாவின் மரணத்தினுல் ஏற்பட்ட நஷ்டம் தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஏற்பட்ட நஷ்டம் மாத்திரமல்ல, இந்திய நாட்டுக்கே ஏற்பட்ட தேசிய நஷ்டமாகும். மறைந்த அந்த மாபெரும் வீரனுக்கு எங்களது அஞ்சலியை செலுத்துகிருேம்.

கேரள நாளிதழ் நவஜீவன்

## வங்கம் வருந்துகிறது!

ஜீவா மறைந்தார் என்ற பேரதிர்ச்சி செய்தி கேட்டு மாளாத்துயரத்தில் ஆழ்ந்தோம். அவரது பிரிவால் வருந்தும் தமிழக மக்கட்கும், கட்சி தோழர்கட்கும், குடும்பத்தினருக்கும் எங்கள் அனுதாபத்தை தெரிவிக்கிருேம். அமரர் ஜீவாவுக்கு எங்கள் அஞ்சலி.

ஆசிரியர் குழு வங்க நாளிதழ் சுவாதினதா

## ஆந்திராவின் அஞ்சலி!

ஜீவாவின்மறைவுச்செய்திகேட்டு திடுக்கிட்டு, அதிர்ச்சியடைந்தோம். அன்னாரது பிரிவால் துயருறும் தமிழ் மக்களுக்கும் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்களுக்கும் எங்களது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவியுங்கள். ஜீவாவுக்கு அஞ்சலி.

ஆசிரியர் குழு தெலுங்கு தின இதழ் விசால ஆந்திரா

# சபதமேற்போம்!

ஜீவாவின் திடீர் மரணம், செங்கொடியின் மீது மக்களுக்குள்ள அன்பை வெளிப்படுத்திற்று; சகல கட்சியினரும், பல்வேறு துறையினரும் ஜீவாவின் பிரிவை தங்கள் சொந்தப் பேரிழப்பாகக் கருதி, தமிழகமெங்குமிருந்து ஓடோடியும் வந்து அஞ்சலி செலுத்தினர். தமிழகத்தின் கடந்த முப்பதாண்டு கால முற்போக்கு இயக்கங்கள் முழுமைக்கும் பிரதிநிதியாகத் திகழ்ந்த ஜீவா, ஒரு முழு கம்யூனிஸ்டாக வாழ்ந்தார். என்றென்றும் முற்போக்காளருக்கு ஆதர்சமாகத் திகழ்கிறார்.

தமிழக முற்போக்கு இயக்கங்களின் பாரம்பரியங்களுக்குப் பிரதிநிதியாக வாழ்ந்த ஜீவாவின் வரலாறு, தமிழக கம்யூனிஸ்டு கட்சியின் வரலாருகும்; ஜீவாவின் வரலாறு ஜனசக்தியின் வரலாருகும்.

ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக.

சுதந்திர இந்தியாவின் தேசப் பாதுகாப்பிற்கு ஓய்வு ஒழிச்சலின்றி போராடுவோம் என்று ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக.

தொழிலாளர்—விவசாய ஒற்றுமைக்காக, தேசிய ஜனநாயக முன்னணிக்காக ஓய்வு ஒழிச்சலின்றி உழைப்போம் என்று ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக.

தோழர் ஜீவா ஸ்தாபித்து, தோழர் ஜீவா வளர்த்து, கடைசி மூச்சுவரை குன்ருமல் என்றும் போல் பொலிவுடன் வெளிவர பாடுபட்ட ஜனசக்தியை நிதி நெருக்கடியிலிருந்து காத்து, பல்கிப் பெருகி ஓங்க ஓயாது உழைப்போம் என்று ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக.

ஜீவா வளர்த்த கம்யூனிஸ்ட் கட்சியை வெகு ஜனக் கட்சியாக வளர்க்க அயராது பாடுபாடுவோம் என்று ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக.

கட்சியைக் காக்க கட்சி நிதி திரட்டிக் குவிக்க முழு மூச்சுடன் இறங்குவோமென ஜீவாவின் பெயரால் பிரதிக்ஞை எடுப்போமாக. ஜீவா நாமம் வாழ்க.

கம்யூனிஸ்ட் நாளிதழ் ஜனசக்தி

## நாம் கண்ட கர்மயோகி ஜீவா !

கம்பனாய், வள்ளுவனாய், காப்பியத் திருமகனாய். உத்தமனாய், சத்தியனாய் விளங்கி வந்த ஜீவாவைப் பறி கொடுத்து பாரதிவிழா கொண்டாடுகிறோம். பாரதிக்குப் பின் பாரதி நம் ஜீவாதான். திரு. வி. க.வையும், வ.வே.சு. அய்யரையும், கவி பாரதியையும் கர்மயோகிகள் என்று ஜீவா கூறுவார். அவர்களெல்லாம் ஜீவாவுக்கு கர்மயோகிகளாக இருக்கலாம். ஆனால் நமக்கு நாம் கண்ட கர்மயோகி ஜீவாதான்.

நமது உள்ளத்தை பாரதியாக்கினார், கம்பனாக்கினார், வள்ளுவனாக்கினார், தேசத் தியாகத் தொண்டனாக்கினார்.

அவர் ஆசான், நான் மாணவன். இதுதான் எங்களுக்குள்ள உறவு,

ஜீவாவின் புகழுடம்பாகிய அவரது இலக்கியங்களை நூல் வடிவில் காணவேண்டும். இதில் கட்சி வேறுபாடு இல்லை. ஜீவா தேசபக்தர்; அனைவருக்கும் ஆசான். ஜீவா பேசுகிறபோது தன்னை மறப்பார். கம்பனாய் ஆவார், பாரதியாய் ஆவார்.

கலைஞர்களுக்கு ஒரு வரவேற்பு விழா நடந்தது. அதில் ஜீவா பேசினார். அன்று என்னிடம் கம்பன் உலகப் பெரிய மேதையென்றும், அவனைப்பற்றிப் பேசுவதற்கு எவ்வளவோ விஷயம் தன்னிடமிருப்பதாகவும், வாரத்துக்கு ஒரு நாள் கம்பனைப்பற்றி வகுப்பு எடுப்பதாகவும் சொன்னார். அதற்கான இடமும் குறிப்பிட்டார். இடத்திற்கு கம்பன் கழகத்தார் அச்சாரமும் கொடுத்துவிட்டனர். அதற்குள் ஜீவாவை காலன் கொண்டுபோய் விட்டானே!

ஜீவா மானிடமாக இருக்கவேண்டுமென்பார். சூரியனைப்போல் மேல் நின்று பார்ப்பார். பிறர் பொறாமை கொள்ளும் அளவுக்கு தியாகம் செய்திருக்கிறார்; யோகியாக இருந்தார்.

ஜீவாவைப் புரிந்துகொண்டு அவர் வழிநடந்தால், நாம் கம்பனைக் காணலாம், வள்ளுவனைக் காணலாம், இளங்கோவையும் சங்க காலச் சான்றோர்களையும் காணலாம்.''

கலைஞர் எஸ். டி. சுந்தரம்.

## கலையுலகில் அரசியலைப் புகுத்திய முதல்வர் ஜீவா

"நான் ஜீவாவுடன் 30 ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டவன். அவர் கலைஞர்களுக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்கினார். அக்காலத்தில் அவரது பாடல்கள் எங்களுக்கு வீராவேசத்தை ஊட்டின, அவரது உரையாடல்கள் எங்களது நாடகங்களுக்கு பெரிதும் பயன்பட்டன. எங்கள் தேசிய நாடகங்களுக்கு அவரது பாடல்களை பயன்படுத்தினோம்.

அரசியலை கலைஞர்களுக்கு முதன் முதலில் புகட்டியவர் ஜீவா. கலையில் அரசியலை முதன் முதலில் புகுத்தியவர் ஜீவா.

ஜீவாவின் மறைவு கம்யூனிஸ்ட் கட்சிக்கு மாத்திரமல்ல; கலையுலகிற்கு மாத்திரமல்ல, மக்கள் அனைவருக்குமே ஓர் பேரிழப்பாகும். வாடித் துடித்துக்கொண்டிருக்கும் மக்களுக்கு அவரது மறைவின் துயரத்தைத் தாங்கவே முடியாது.

1934-ம் ஆண்டு நீலகிரியில் ஒரு சங்கத்தில் கூடியிருந்தோம். அக் கூட்டத்தில் ஐந்து பேர்கள்தான் இருந்தோம். ஜீவா பேசினார். ஆயிரக்கணக்கான மக்களுக்குப் பேசுவது போல் இரண்டரை மணி நேரம் உரத்த குரலில் பேசினார். பேசி முடிந்ததும் தம்பி பகவதி அவரை நோக்கி, "இப்படி ஐந்து பேருக்காக ஏன் இவ்வளவு கதறுகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு ஜீவா, "இந்த ஐந்து பேர்களில் ஒருவராவது நான் சொல்லுவதை உள்ளத்தில் பதித்து, நாட்டுக்குப் பாடுபட்டால் அதுவே போதும்" என்றார். அப்படிப்பட்ட லட்சியவாதி ஜீவா.

'காலுக்குச் செருப்புமில்லை' என்ற பாட்டை நாங்கள் மிக உணர்ச்சியோடு அக்காலத்தில் பாடுவோம். அதை நான் பாடுகிறேன். அப்பாட்டை அக்காலத்தில் பாடியவாறே மிக மிக எடுப்பாக உணர்ச்சி பொங்கபாடி கலைஞர்கள் சார்பாக அஞ்சலி செலுத்துகிறேன்.

ஔவை டி. கே. ஷண்முகம்

## நான் சந்தித்த முதல் தலைவர் !

கலைவாணர் என்.எஸ்.கே.எந்த அளவுக்கு என் மனதில் குடிகொண்டு இருக்கிறாரோ அதே அளவு ஜீவா என் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறார்.

1935ம் ஆண்டு முதன்முதலாக, என்.எஸ்.கே. எனக்கு ஜீவாவை அறிமுகம் செய்து வைத்தார். அன்றைய தினம் ஜீவாவை நான் என் உள்ளத்தில் எப்படி பதிய வைத்தேனோ அதே நிலையில்தான் கடைசி வரையில் இருந்தார்.

எந்த நிகழ்ச்சியில் அவர் கலந்துகொண்டபோதிலும், ஆழ்ந்த கருத்துக்களை அள்ளித் தெளிக்கும் ஒரு உயர்ந்த தன்மை அவருக்குண்டு. அவரது தூய்மையான வாழ்க்கை அவரது உயர்வுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

நான் என் வாழ்நாளிலேயே முதன் முறையாக சந்தித்த அரசியல் தலைவரே ஜீவா தான். முதன்முதலாக கேட்ட அரசியல் பேச்சும் ஜீவாவின் பேச்சுதான்......

1935ம் ஆண்டு ஒருநாள் பெரம்பூரில் அவரது கூட்டமொன்று நடந்தது. நானும் என். எஸ். கேயும் ஆழ்வார் பேட்டையிலிருந்த வேல் பிக்சர்ஸிலிருந்து பெரம்பூர் சென்று ஜீவாவின் பேச்சைக் கேட்டோம். கூட்டம் முடிந்து பின்னர், அங்கிருந்து இரவு 11 மணிக்கு நடந்தே வந்தோம். அந்த நிகழ்ச்சியை என்றுமே மறக்கமுடியாது.

அந்நிகழ்ச்சிக்குப் பின்னர், அவரோடு பலமுறை பழகும் சந்தர்ப்பம்கிடைத்தது! அவரோடுபழகியஒவ்வொரு சந்தர்ப்பமும் மறக்கமுடியாத சந்தர்ப்பங்களாகவே அமைந்தன.

அவர் ஒரு அரசியல் கட்சித் தலைவர் என்ற முறையில் அவர் என்னோடு பழகியதைவிட தமிழர், அன்பும், பண்பும் கொண்ட உன்னதமான உயர்மிக்க மனிதன் என்ற முறையோடு பழகியதுதான் அதிகம். இதை நினைக்கும் போதெல்லாம் என் உள்ளம் சிலிர்க்கிறது.

தோழர் ஜீவா கம்யூனிஸ்ட் கட்சிக்கு மட்டுமல்ல; தமிழர்களுக்கும், ஏன் மனிதர்கள் அனைவருக்குமே சொந்தமானவர்.

— புரட்சி நடிகர் எம். ஜி. ராமச்சந்திரன்

## உலகத்தில் உயர்ந்தவன் நீயே !

தமிழ்த்தாயின் தனிப் புதல்வன் தலைவர் ஜீவா ! எனது பள்ளிப்பருவத்தில் அவரை அறியும் பேறுபெற்ற வன் நான்.

முத்தமிழின் மூச்சாய், முரசொலிக்கும் எழுச்சிப்பெருங் கடலாய், நமது சித்தம் தனை ஈர்த்து நின்ற ஜீவா, நின்னையா இழந்தோம் ; இல்லை, நிம்மதிதனை இழந்தோம்; நீர் விழியானோம். ஆனால் நெஞ்சத்தே உன்னை நிரப்பிக் கொண்டோம்.

மறைந்தவர்கட்கு சம்பிரதாய இரங்கல்களினின்றும் மாறுபட்டவன் நீ! மனித உள்ளங்களை தொட்டு துவளச் செய்துவிட்டவன் நீ!

மனிதன் என்ற சொல் எவ்வளவு கம்பீரமானது என்றான் மாமேதை கார்க்கி.

ஜீவா என்ற சொல்லன்றோ, எங்கட்கு ஜீவன் மிக்க கம்பீரமாக ஒலிக்கிறதே. ஏன் ?

" கார்க்கி " கண்ட மனிதரிலும் சிறந்தவன் நீ. கடமை செய்த மனிதரிலும் மிகமிக உயர்ந்தவன் நீ.

காலத்தாலும் மறைக்க முடியாத மாவீரன் வள்ளுவன் வழி நின்றவன். கம்பனை கரைகண்டவன். பாரதியின் மறு பதிப்பானவன். பழந்தமிழிலும்திளைத்து நின்றவன் ! பாட்டாளிகளுக்காக கடைசி வரை உழைத்து உழைத்து உழைப்பிலே உயிரை இழந்தவன். உலகத்தில் நீயே உயர்ந்தவன்!

கடமையாலும், கவியுள்ளத்தாலும், கட்சியை கடந்த, களங்கமற்ற அன்பாலும் கல்லான உள்ளங்களை வென்று நின்றவன். தியாக வேள்வியிலும் தரங்குறையா தங்க ஒளியாய் ஜொலித்தவன்.

மாசற்ற மக்கட்தலைவனே ! தியாகச்செம்மலே நின் திருவடிக்கு என் அஞ்சலி.

புதுமைக் கலைஞர் எஸ். ஏ. அசோகன் பி. ஏ.

## அரசியலை வியாபாரமாக்காத ஒரே ஒரு தலைவர்

அரசியலை வியாபாரமாக்காத ஒரே ஒரு அரசியல் தலைவர் ஜீவாதான்!

எனக்கும் தோழர் ஜீவா அவர்களுக்கும் நீண்ட காலமாகத் தொடர்பு உண்டு.

எல்லா அரசியல் கட்சித் தலைவர்களுடனும் நான் பழகி இருக்கிறேன். ஆனால் ஜீவா ஒருவர்தான் அரசியலை வியாபாரமாக்கவில்லை.

அது மட்டுமல்ல, தூய்மையின் சிகரமாகவும் அவர் திகழ்ந்தார். இதை நான் மேடை ஏறிக்கூடப் பேசுவேன். அரசியல் கட்சித் தலைவர்களிலேயே தூய்மையாக வாழ்க்கை நடத்திய ஒரே ஒரு தலைவரும் ஜீவாதான்!

என் அருமைத் தலைவர் மறைந்த சமயம் நான் ஊரில் இல்லாமல் போனதை எண்ணி மிகவும் வருந்தினேன். எனக்கு மிகவும் வேண்டியவர்கள் பிரியும்போதெல்லாம் எதிர்பாராதவிதமாக நான் ஊரில் இல்லாமலேயே போயிருக்கிறேன்.

சினிமாவுக்கென ஒரு கதை எழுதித் தரும்படி பல காலம் நான் வேண்டிக் கொண்டிருந்தேன், அவரும் தருவ தாகக் கூறி இருந்தார். கடைசியில் அது சாத்தியமில்லாம லேயே போய்விட்டது குறித்து நான் மிகமிக வருந்தினேன்.

அந்த தன்னலமற்ற தனித்தன்மை படைத்த தியாகச் செம்மலுக்கு என் அஞ்சலி.

— நடிகர் திலகம் சிவாஜி கணேசன்

## கலைக் காவலர்

கலையும் இலக்கியமும் பொழுது போக்கும் போதைப் பொருளாக அல்லாது, புதியதோர் சமுதாய அமைப்பிற்கு வழிகாட்டியாக இருக்க வேண்டுமென சமுதாய மக்களிடமிருந்து சட்டமன்றம்வரை பாடுபட்ட மக்கள்தலைவர் மறைந்தார். அமரர் ஜீவாவுக்கு எனது அஞ்சலி

கலைஞர் டி. கே. பாலச்சந்திரன்

## தியாகச் செம்மல்

அகராதி புத்தகத்தில், ஒரு புதுத்திருத்தம் சொல்லப் போகின்றேன் : என்னென்னு எல்லாரும் கேட்பீங்க : ஜீவான்னு அதுக்கு ஏதோ ஒரு அருத்தம் எழுதியிருப்பாங்க; அதெல்லாம் ஒரு வகையிலேதான் சரியா இருக்கலாம். ஆனல் எல்லா வகையிலும் சரியாயிருக்கிற ஒரு அருத்தம் உண்டு. இது என்னன்னு தெரியுமா? சொல்லட்டுமா! நல்லா கேட்டுக்கிங்க. அதாவது ஜீவான்னு; தியாகம், உழைப்பு, உண்மை, ஒருமனுசங்கிற அர்த்தம்தாண்.

தியாகச்செம்மல் ஜீவானந்தம் அவர்கள் நம் நாட்டின் ஜீவனும், ஆனந்தமும் இவர் ஒருவரிடம்தான் அடங்கி யிருக்கின்றன. இதை (என். எஸ். கே.) நான் புரிந்து கொண்டால் மட்டும் போதாது.

தியாகத் தளும்புகள் நிறைந்த தன்னலமற்ற தியாகி என்று நான் சொல்லவில்லை. சொல்லக்கூடாது. ஏனெனில் நாங்கள் இருவரும் நாஞ்சில் நாட்டுக்காரர்கள்—ஆனல் நாடே சொல்கிறது. நானும் சேர்ந்ததுதானே நாடு.

— கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன்

## மோகனப் புன்சிரிப்பு முகிழ்க்காதோ ?

ஜீவா!

செந்தமிழ்க் காவலனே! பைந்தமிழ்ப் பாவலனே!
செங்கொடி கொண்டவனே! தியாகத்தின் செம்மலரே!
சிறைபல கண்டவனே! அறநெறி நின்றவனே!
தொண்டு புரிந்தவனே! துவளாத நெஞ்சினனே!
கற்கண்டு எழுத்தினனே! கடல்மடைப் பேச்சினனே!
கனல்கக்கும் நாவினனே! பணிவுள்ளப் பண்பினனே!
தெள்ளுதமிழ் பேசும்நின் திருவாய்இனித்திறவாதோ?
மோகனப் புன்சிரிப்பு இனி நின்வதனத்திலே
[முகிழ்க்காதோ!
ஆவேசங் கலந்து வெளிப்படும் நின்மூச்சு இனிக்
[கேளாதோ?

கலைஞர் முகவை ராஜமாணிக்கம்

## குருதியெலாம் புரட்சி மணம்!

நாமணக்கும் நல்ல தமிழ் மணக்கும்
நாஞ்சில் என்ற பேர் மணக்கும்
பாமணக்கும் பூதப்பாண்டி யெனும் ஊர் மணக்கும்
பண்பாளர் ஜீவா புகழ் பாடுகின்ற வாய் தேன்மணக்கும்
ஆட்டம் போடும் வாலிபத்தின்—பனி
மூட்டம் கலையா வயதினிலே
நாட்டம் கொண்டார் பொது வாழ்வில்!
தோட்டம் நிறையப் பூ இருந்தும்
தொலைவில் பறந்த வண்டினைப் போல்
தொண்டே எந்தன் வாழ்வென்று சுற்றிப் பறந்தார் [நாட்டினிலே!
வீட்டில் சிலநாள் தங்கிடுவார்—சிறைக்
கூட்டில் பலநாள் வதங்கிடுவார்.
மேடையில் முரசு கொட்டிடுவார்—வாழ்வின்
கோடையில் பயணம் சென்றிடுவார்.
" தாமரை " மலரைத் தந்திடுவார்—அதில்
தமிழாம் அமுதை உண்டிடுவோம்.
கையை ஓங்கிப் பேசிடுவார்—அங்கே
கடும்புயல் வீசக் கண்டிடுவோம்.
வாரீர் என்று அழைத்திடுவார்—அந்த
வாஞ்சை கண்டு சிலிர்த்திடுவோம்,
குன்றும் அவர்தம் தோளெங்கே?
குன்று அவர்தம் திறமெங்கே?
நன்றும் அவர்தம் குணமெங்கே?
நாட்டுக் குழைக்கும் பண்பெங்கே?
வீரம் செறிந்த முகம் எங்கே?
விழிகள் கொட்டும் ஒளி எங்கே?
குருதியெலாம் புரட்சிமணம் கமழுகின்ற வரிப்புலியை,
கொள்கையிலே உறுதிகொண்ட தமிழ்க் கவியை
கொள்ளையடித்து மகிழ்ந்ததோ கொடுஞ்சாவு எனக் [கேட்டுக்
குமுறுகின்றார் நாட்டுமக்கள்! வாழ்க ஜீவா!
வாழ்க என்றும்!!

கலைஞர் மு. கருணாநிதி.

## அண்ணல் ஜீவானந்தமே!

மேடையில் ஓர் வேங்கைபாயுமே கைகளை
விண்ணோக்கி வீசி வருமே
வீறுகொண் டோர்யானை போரிற் கிளம்புமே
வெஞ்சேனை முறுக் கேறுமே
கோடையின் இடிகொண்டு கொட்டுமே வார்த்தையில்
கொஞ்சு தமிழ் விளை யாடுமே
குன்றங் கொடுத்ததோள் மன்றாட ஆடுமே
கொற்றவன் எழில் தோன்றுமே
நாடென்றும் நாடுமே நாடுவன யாவுமே
நாட் டிற்களிக்க வருமே
நற்கொள்கை ஏற்றுமே நாளெலாம் வீதியில்
நடைபோட் டசைந்து வருமே
பாடன்று முன்னமே பல்பாடல் ஊறுமே
பகைவர்க்கும் அமு தாகுமே
பற்றுவன பற்றுமே பற்றியதை முற்றுமே
பாலாக்கி உண்டு விடுமே
ஆடியும் ஓடியும் அறமே வளர்க்குமே
ஐயகோ ஏழை மனமே
அம்மேனி சாய்ந்ததே! அம்மேனி வெந்ததே
அண்ணல் ஜீவா னந்தமே.

— கவிஞர் கண்ணதாசன்.

## கொள்கைக் கணை!

உன்கரத்து முஷ்டியிலே உலகைக் காட்டி
உழைப்பாளர் கூன்முதுகை நிமிர்ந்திட வைத்தாய்
தன்னகத்தை சேவையெனும் தணலிலிட்டாய்
தமிழுக்கு சாகாத ஜீவன் தந்தாய்
முன்னிருந்த வாழ்வினிலே புவியோடு வானம்
முத்தமிட கொள்கைக் கணையாக பாய்ந்தாய்
அன்புளத்தில் நின்றொளிரும் நினைவுன் தீபம்
அறிவலையின் உந்தலினால் அக்கரை கண்டாய்.

கவிஞர் கம்பதாசன்.

## தமிழ்க்கலையின் முழுவடிவம்!

*புவியினிலே சுவர்க்கத்தை சமைப்பதற்கு*
*போராடும் வர்க்கத்தின் தலைவன் ஜீவா.*
*தன்னலமே சிறிதுமிலா இயக்கம் தந்த*
*தமிழ்க்கலையின் முழுவடிவம் கலைஞன் ஜீவா!*

**கவிஞர் பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம்,**

## ஜீவா ஓர் ஜீவநதி!

*ஜீவாவின் மறைவினுல் தமிழ் உலகம் ஓர் துருவ நட்சத்திரத்தை இழந்து விட்டது. ஜீவா ஓர் ஜீவநதி. அதன் சங்கமம் செங்கடல். அமரராகி விட்டார் ஜீவா! ஆறுதல் கொள்ள முடியவில்லைதான். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, கடமை, செய்து அவர் காண விரும்பிய பாட்டாளி சமுதாயத்தை நம் தலைமுறையில் காணுவோம்.*

**திருமதி சிவகாம சுந்தரி.**

## என்னை கம்யூனிஸ்ட் ஆக்கினர்!

*1936-ல் கல்லூரி மாணவனுக, பழுத்த காந்தீய பக்தனுக இருந்தபொழுது முதன்முறையாக சந்தித்தேன். அவரது ஸ்டாலின் மீசை, அவரை எங்கட்கு ஸ்டாலினுகவே தோற்றமளித்தது ஏழைகளின் கண்ணீர், முதலாளிகளின் கொடுமை, இவைகளை சித்தரித்து காட்டிய பிரசங்கத்தில் திளைத்தோம். 1940-ல் சிறையில் இருவரும் சந்தித்தோம் இறுதியாக அவர் வென்ருர். என்னை கம்யூனிஸ்டு ஆக்கினர் அந்த ஆசான். வழிகாட்டி—இலட்சிய தலைவர் நிரந்தர ஓய்வு கொண்டார். நாங்கள் நெஞ்சம் பதறி நிற்கிருேம்.*

**K. பாலதண்டாயுதம்.**

## அதிர்ச்சி அடைந்தேன்!

*சோகச் செய்திகேட்டு அதிர்ச்சியடைந்தேன். உங்கள் பிரிவாற்ருமையில் நாங்கள் அனைவரும் பங்கு கொள்கிருேம்.*

**கேரள முன்னுள் முதலமைச்சர் இ.எம்.எஸ். நம்பூதிரிபாட்.**

## மக்கள் தலைவர்!

ஜீவா தமிழ் மக்களின் சொத்து; கம்பீரமான எழுத்தாளர். கவிஞர்; மக்கள் தலைவர். மாபெரும் பேரறிஞர்! சோதனையிலும் உறுதியுடன் நின்ற சோஷலிச இலட்சியவாதியான ஜீவாவின் மறைவு கேட்டு எல்லா கம்யூனிஸ்டுகளும் நாட்டின் விடுதலைக்காகப் போராடிய அனைவரும் ஆழ்ந்த துயரமடைவர்.

**எஸ். வி. காட்டே.**

## நாடு ஒரு தேசபக்தரை இழந்து விட்டது!

ஜீவானந்தத்தின் திடீர் மறைவுகேட்டு அதிர்ச்சியடைந்தோம். ஆழ்ந்த்துயர் அடைந்தோம். ஜீவாவின் மறைவால் நாடு ஒரு தேசபக்தரை இழந்து விட்டது. கம்யூனிஸ்டு கட்சி ஒரு தலை சிறந்த தோழரை—வாழ்க்கையை சோஷலிச லட்சியத்திற்கு அர்ப்பணித்த தோழரை இழந்து விட்டது.

ஜீவா, தமிழ் நாட்டின் தொழிலாளர் வர்க்கத்தின் நெஞ்சங்களிலும், நாட்டின் நினைவிலும் என்றும் வாழ்வார்.

எங்கள் அருமைத் தோழரின் நினைப்புக்கு எங்கள் அஞ்சலியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவரது பிரிவினால் வேதனையிலாழ்ந்துள்ள எல்லாத் தோழர்களுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் எங்கள் துக்கத்தையும் அனுதாபத்தையும் தெரிவிக்கிறோம்.

**ஏ. கே. கோபாலன். எம். பி.  பூபேஷ்குப்தா எம். பி.**

## ஈடு செய்ய முடியாத பேரிழப்பு!

ஜீவானந்தம் அவர்களின் மறைவு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும்—என்னுடைய ஆழ்ந்த அனுதாபங்களை, அவரது குடும்பத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**எஸ். ஏ. டாங்கே.**